

# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 19 Issue 1 August 2024 Rs.30
ஆண்டு 19 இதழ் 1 ஆகஸ்ட் 2024 ரூ.30

**நோபல் உரை**
சீமஸ் ஹீனி

**சிம்பொனியும் இந்திய சிற்றரசரும்**
ஹவி

**சிறுகதை**
இளங்கோ
ஆ. ஆனந்தன்

**நேர்காணல்**
கிறிஸ்டியன் மூஞ்சியூ

**கவிதை**
கண்டராதித்தன்
சாமி கிரீஷ்
கே. சச்சிதானந்தன்
ஆர். வத்ஸலா



ஆண்டு 19 இதழ் 1



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஆகஸ்ட்-2024 விலை ரூ. 30

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவிசுப்பிரமணியன்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **பிரபாகரன்**

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044 - 2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒமிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...



அட்டை புகைப்படம்: நோயல் கார்கி

# நிறை கணம்

**கண்டராதித்தன்**
**ஓவியம்: வெங்கடேசன்**



கட்டுக்கடங்காத மழைக்காலம் போனபின்
தாங்கல் ஏரி குளம் காய்ந்து கிடக்க
குட்டிக் குருவிகள் கூடுவிட்டு கூடுபாய
எட்டுத்திசையும் போகும் போகும்

தென்னையின் மந்திகள்
கிளைக்குக் கிளை தாவும்
நஞ்சரவம் நகரும்
நாய்க்குரலோ திக்கெட்டும்
கேட்கும்
பட்டப்பகல் வருமென்பதால்
கூகை கூடடையும்.

பட்டிப் பூ பூக்கும்
செட்டுச்செடிகளுக்கருகில்
தட்டிப் படல் மீது கொடிபடர
சிறுகுடிலில்
குந்தித்தின்னும் குறுமுனிக்கு
எண்ணம்போல் வாழ்வா
என்றால் இல்லை இல்லை
குட்டக்குட்ட குனியவும்
நறுமுகை இற்று
நாற்சந்தியில் நாறும்
நற்பெயர்தான் அவருக்கு

சித்து விளையாட்டுகள்
தெரியுமென்றாலும்
சுற்றிச்சுற்றி
மத்தால் அடிவிழும்
ஊழ் நிறையூர்.

ஆசாபாசத்திற்கும் அளவில்லை
அண்ணன் தம்பிகளுக்கும் குறைவில்லை

ஆனாலும் அன்னாருக்கு
மாளாத மத்தடியால்
நட்டமென்றால் பெரும் நட்டம்
வெட்டவெளி பட்டப்பகல்
மற்றும்
நட்ட நடுத்தெருக்கள் தோறும்
சித்தம் கலங்கி பாலகனைப் போலத்
தேம்பி நின்றார்
எட்ட ஓடிய
நாய்களெல்லாம்
கிட்டே வந்து
சிறுநீர்கழிக்க காலைதூக்கும்
காலமும் வந்தது.

குறுமுனி புரிந்துகொண்டு
கோபம் தணிந்து

ஓகோ
எப்போதும் என்னுடனிருந்து
சித்தர் மனம் போல
பாவனை காட்டும் அற்ப மனமே

குஞ்சிக் குளுவானெல்லாம்
காஞ்சித் தலைவனென்றால்
அஞ்சி நடுங்காமல் உன்குஞ்சு பத்திரம்
என்று எச்சரிக்கக் கூடாதா
என்று தன்னைத்தானே
கடிந்துகொண்டு

எதிரிகள் எதிரே வரும்போதெல்லாம்
சித்திரம் போலிருந்துத்
தன்னைக் காத்துக்கொண்டார்.



தாளாத தருணத்திலெல்லாம்
மத்தடி நினைவிற்குவர

குலம் காத்து நின்ற காத்தாயி

மாசற்ற நாம சொருபமே
சித்தி
என்று அருளினாள்.

வட்டிக்கு வட்டி பிறகுண்டு
என்று திட்டித்திரிந்த மனதை
கிட்டி போட்டு கட்டி விட்டுக்
குறுமுனி சொன்னார்

சவமே சற்றே நீ சும்மாயிரு...

கண்டராதித்தன் <sarayukandar@gmail.com>

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

1995

**சீமஸ் ஹீனி** | Seamus Heaney

# கவிதை என்னும் மேன்மை

**தமிழில் : ஸிந்துஜா**

நான் முதன்முதலாக ஸ்டாக்ஹோம் என்னும் நகரின் பெயரைக் கேட்ட போது அங்கு செல்லும் வாய்ப்பு எனக்குக் கிடைக்கும் என்று ஒரு போதும் நினைக்கவில்லை. அதுவும் புகழ்பெற்ற நோபல் அறக்கட்டளையின் சுவீடிஷ் கலைக்கழகத்தின் விருந்தினனாகச் செல்வேன் என்று கனவிலும் நினைக்கவில்லை. அந்தச் சமயத்தில் இம்மாதிரி வாய்ப்பு கிடைப்பது என்பது எதிர்பாராதது மட்டுமல்ல, நினைத்துப் பார்க்கக் கூட இயலாத ஒன்றாக இருந்தது.

*1940*களில் என் குடும்பத்தின் மூத்த மகனாக இருந்தேன். அயர்லாந்தைச் சேர்ந்த டெர்ரியில் பெரிய குடும்பம். மூன்று அறைகள் அடங்கிய, ஓலைகளால் கட்டப்பட்ட பண்ணை வீட்டில் நெருக்கியடித்துக் கொண்டு வாழ்ந்தோம். வெளியுலகை அவ்வளவாக எட்டிப்பாராதிருந்த இடத்தில் ஒருவருக்கொருவர் தோழமையுடனும் நெருக்கமாகவும் வாழ்ந்தோம். இரவில் குதிரை லாயத்திலிருந்துஒலிகேட்கும்.சமையல்அறையிலிருந்து லாயத்துக்கு அப்பாலிருந்த படுக்கையறையில் இருக்கும் பெரியவர்களின் பேச்சு கேட்கும். நாங்கள் எல்லாவற்றையும் பழகிக்கொண்டோம். மரத்தின் மீது வீசும் சாரல், சுவரில் குதித்து ஓடும் சுண்டெலிகள், வீட்டுக்குப் பின்புறமிருந்து வயலைத் தாண்டி சென்ற ரயில் பாதையிலிருந்து கூவும் ரயில்கள்.... நாங்கள் இவற்றையெல்லாம் ஒருவித விடுதலையுணர்ச்சியுடன் எதிர்கொண்டோம். புராதனத்துக்கும் நாகரீகத்துக்குமிடையான ஒருதிரிசங்கு நிலைமையில் அசரித்திரத்துக்கும் அபாலுணர்வுக்கும் இடைப்பட்ட ஓர் நெகிழ்ந்த நிலையில் இருந்த வாழ்க்கையில் எந்தவிதமான பொருளையும் ஏற்கும் புழக்கடை வாளி நீரெனக் காணப்பட்டோம். ஒவ்வொரு முறையும் ரயில் செல்லும் போது நிலத்தில் ஏற்படும் நடுக்கம் வாளி நீரைக் கலக்கிக் குமிழிகளாக்கும். பரிபூரண அமைதியுடன்.





நிலத்தின் நடுக்கம் மட்டுமல்ல எங்களைக் கவர்ந்தது, சுற்றியிருந்த காற்றும் உயிர்ப்புடன் தன் உயிர்ப்பைக் காண்பித்தது. புங்க மரத்தை அசைத்து வீசிய காற்று அருகே உயர்ந்து நின்ற நீண்ட மரத்தின் கிளைகளையும் அசைத்தது. அப்போது இலைகளும் புரண்டு சென்று சமையல் அறை மூலையில் நாங்கள் வைத்திருந்த வயர்லஸ் செட்டைச் சென்றடையும். திடீரென பிபிசியின் செய்தியாளரின் குரல் கடவுளுடையது போல எங்களை விதிர்க்க வைத்தபடி வெளியே வரும். படுக்கையறைக் குரல்கள், சமையல் அறை ஒலிகள் இவற்றையெல்லாம் தாண்டி வேறு எந்த சப்தமும் உலகில் இல்லாதது போல அது எங்களை வந்து அடையும்.

எங்கள் பெற்றோரின் வீட்டுப் புழக்கத்தில் உள்ள பேச்சில் தென்படும் அண்டைவீட்டாரின் பெயர்களைத் தவிர செய்தி வாசிப்பாளர் குரல் மூலம் யுத்த வீரர்கள், அவர்கள் தாக்கிய இடங்கள், போர் முனைகள், படைகளின் இருப்பிடங்கள், இழந்த விமானங்களின் எண்ணிக்கை, யுத்தத்தில் கைதிகளாகப் பிடிக்கப்பட்டவர்கள், மரணமுற்றோர் எவ்வளவு பேர், படைகளின் முன்னேற்றம் ஆகியவற்றைத் தெரிந்துகொள்வோம். இவை தவிர எங்கள் கவனத்தைக் கவர்ந்தவை 'எதிரி', 'நேசநாடுகள்' போன்ற வார்த்தைகள். ஆனால், உலகை உலுக்கிய இப்போர்ச் செய்திகள் எனக்கு அச்சத்தை ஏற்படுத்தவில்லை. சில சமயம் உணர்ச்சி வசப்பட்டு எழும் செய்தி வாசிப்பாளரின் குரல் கூட எங்கள் மந்தமான புரிதலினால் உணர்ச்சிக் கொந்தளிப்பை ஏற்படுத்தவில்லை. என்னுடைய அரசியல் புரிதல் இல்லாமை பரிதாபத்துக்குரியதாக இருக்கக் கூடுமென்றாலும், நான் உணர்ந்த பாதுகாப்பான உணர்ச்சி எனக்கு முக்கியமாக இருந்தது.

போர்க்காலம், சொல்லப் போனால் அறிமுகமற்றதாகவும் அறிவொளி தராததாகவும் சரித்திரத்திற்கு அப்பாற்பட்டிருப்பது போன்றும் இருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால், காலம் செல்லச் செல்ல என் கேள்வி ஞானம், கூர்மை பெற ஆரம்பித்தது. என் காதில் வைத்துக் கேட்க வசதியாக வயர்லஸ் ஸ்பீக்கரின் அருகேயுள்ள சோபாவின் மீது ஏறி நிற்பேன். செய்திகள் என்னை அவ்வளவாகக் கவரவில்லை. நான் கேட்க விரும்பியது எல்லாம் டிக் பார்ட்டன் என்னும் ஆங்கிலத் துப்பறிவாளனை வைத்துப் புனையப்பட்ட தொடரை அல்லது பிக்கிள்ஸ் என்னும் ராணுவப் பறக்கும் தட்டு மீதான கேப்டன் டபிள்யூ.ஈ. ஜானின் வீர தீரச் சாகசச் செயல்களைத்தான். தவிர மற்ற குழந்தைகள் பெரியவர்களாக ஆகிக் கொண்டிருந்ததால், அவர்களுக்குச் சமையல் அறையில் அதிக வேலை இருந்தது. ஆகவே என் செவிப்புலனைக் கூர்மையாக ஆக்கிக்கொள்ளவும் மற்ற விஷயங்கள் பற்றித் தெரிந்து கொள்ளவும் ரேடியோ அருகில் கிடந்தேன். அப்போது அயல்நாட்டு வானொலி நிலையங்கள் எனக்குப் பழக்கமாகின. லெப்ஸிக், ஒஸ்லோ ஸ்டட்கார்ட் போன்றவை தவிர ஸ்டாக்ஹோமும்.

ரேடியோ ஸ்டேஷன்களை என் கை திருகத் திருக அயல்மொழிகள் என் காதில் விழுந்தன. பிபிசியிலிருந்துஏரன்ரேடியோவரை,லண்டனிலிருந்து டுப்ளின் வரை வானொலியில் பயணம் செய்யும் போது அங்கு சந்தித்த மொழிகளை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அப்படியிருந்தும் பல்வேறு உலகங்களின் தொடர்பைப் பெற நான் முயற்சித்ததாக எனக்குத் தோன்றிற்று. இத்தகைய முயற்சி எனக்கு மொழிகளின் உலகுகளைத் திறந்து விட ஆரம்பித்து அவற்றை ஏணிப்படிகளாகக் கொண்டு என் பயணத்தின் இறுதி எல்லையை நோக்கி நடக்கத் தொடங்கினேன், அத்தகைய பயணம்தான் இன்று என்னை இங்கே கொண்டு வந்து விட்டிருக்கிறது. இங்கு நான் காணும் மேடை ஓர் விண்வெளி நிலையம். ஏணிப்படி அல்ல. அதனால்தான் என் வாழ்க்கையில் ஒரே ஒரு முறை காற்றில் நடக்கும் சொகுசை அனுபவிக்கத் தீர்மானித்திருக்கிறேன்.

இந்த விண்வெளிப் பயணத்தை எனக்கு அளித்தது என் கவிதை தான். மிகச் சமீபத்தில் நான் எழுதிய ஒரு கவிதையில் எனக்கு நான் இட்ட கட்டளைப்படி (வேறு யார் என் கட்டளைக்குப் பணிவார்கள்?) ‘உன் தீர்ப்பை மீறி வானத்தில் நடை போடு’ என்று வரும். வெளியுலகத்தின் நிதர்சனத்தைப் போலக் கவிதை ஆணையிட முடியும். ஐம்பது வருஷங்களுக்கு முன்பு அந்த வாளியில் இருந்த நீர் தளும்பித் துள்ளிக் குதித்ததைப் போலக் கவிதையும் சுழற்சியை உள்ளடக்கிய கவியை அடையாளப்படுத்தவல்லது. நமது வளர்ச்சியில் இத்தகைய ஆணைக்கு முக்கிய பங்குண்டு. புத்திசாலித்தனத்தின் ஆறாத பசியை ஆற்றும் சக்தியை உடைய அந்த ஆணை நேசத்தைப் பற்றிக் கொள்ளும் இயல்பை உடையதாக இருக்கிறது. கவிதை, தான் கவிதையாக இருப்பது மட்டுமில்லாமல், சித்தத்தை ஒருமைப்படுத்தி ஒழுங்கு செய்யவும் உதவுகிறது. ஒரு குழந்தை வானொலியிலிருந்து வரும் ஸ்டாக்ஹோம் என்னும் வார்த்தையைக் கேட்கும் அதே சமயம் வானொலியின் வாடிக்கைக்காரர்களை நோக்கிப் பேசும் மனிதனைக் கண்டு அடையும் பரவசத்தைக் காணும் தருணம். நான் கவிதைக்கு உரித்தான பெருமையைத் தர விரும்புகிறேன்: அது இன்றும் என்றும் வாழ்வின் உண்மைக்குப் பக்கத்தில் நிற்கிறது.

ஒரு கவிதை நேரடியாகவும் அது சார்ந்திருக்கும் உலகத்தை இறுகத் தழுவியும் வாழ்க்கையின் உண்மையை வெளிக் கொணர்வதாகவும் இருக்க வேண்டும். நான் ஜான் கீட்ஸின் ‘இலையுதிர் காலத்துக்கு’ என்னும் வாழ்த்துப்பாவைப் பள்ளிச் சிறுவனாக இருந்த காலத்திலேயே ரசித்திருக்கிறேன். மொழிக்கும் உணர்ச்சிகளுக்கும் பாலமாக அது இருந்ததால்; என் வாலிபப் பருவத்தில் அகக் களிப்பையும் வேதனையையும் ஒரு சேர உணர வைத்த ஜெரார்டு மேன்லி ஹாப்கின்ஸை நான் மிகவும் ரசித்தேன். ராபர்ட் ஃப்ராஸ்ட்டின் ஒழுங்கு நிறைந்த, இயற்கைக்கு உகந்த கவிதை வரிகள் எனக்கு மிகவும் பிடித்திருந்தன. சாஸர் எனக்குப் பிடித்திருந்ததும் இதே காரணத்தினால்தான். பின்னாளில் நான் வில் ஃபிரெட்டைப் படிக்கும்போது அவரிடமும் ஒழுங்கும் இயற்கையை நேசிக்கும் தன்மையும் நிறைந்த கவிதை வரிகள் வெளிப்பட்டன. புதிய ஏற்பாடு (NewTestament) எதிர்கொண்ட புதிய நூற்றாண்டில் அதிர்ச்சி தரும் விதத்தில் காணப்பட்ட மூர்க்கத்தன்மையை எதிர்த்து அவர் எழுதிய கவிதை என்னை வெகுவாகக் கவர்ந்தது. பின்னர் எலிசபெத் பிஷப்பின் பாணி, ராபர்ட் லாவெல்லின் விடாக் கடுமை, பாட்ரிக் கவனாவின் எதிர்ப்புக் குரல் இவற்றில் தென்பட்ட கவிதையின் திறமையும் பொறுப்புணர்வும் என்னில் ஆழ்ந்த பாதிப்பை ஏற்படுத்தின. கவிதை என்பது என்ன நடக்கிறதென்பதையும் யுகத்தின் மீது பரிவுகொள்ள வேண்டியதையும் கூறும் அதே சமயம் அது ஏதோ தவிர்க்க முடியாத ஒன்று என்ற பிரமையைத் தடுக்கும் வல்லமை வாய்ந்தது என்றும் நான் உணர்ந்தேன்.

வட அயர்லாந்தில் பிறந்து வளர்ந்த அனுபவம், கலையின் நேர்மையைக் கண்டு வியந்து அதனுடன் ஒன்றி விடும் மனப்பாங்கைத் தந்திருந்தது. இவ்வளவுக்கும் கால் நூற்றாண்டுக்கும் மேலாக அங்கு நான் இருந்ததில்லை என்றாலும்! உலகின் எந்தப் பகுதியும் தன்னுடைய காவல் தன்மையையோ யதார்த்தச் சூழல் பற்றியோ பெருமைகொள்வதில்லை. அதே போல எந்தப் பகுதியும் ஒருவரின் விருப்பத்தின் மீது அரசாட்சி செய்ய விரும்புவதில்லை. எனவே இவற்றோடு அவ்வப்போது கொஞ்சம் ஒத்துச் சென்றும் கொஞ்சம் தடித்த தோலுடன் வளைய வந்தும் நான் வளர்ந்தேன். வேறுபட்ட கவிஞர்களாக விளங்கிய வாலஸ் ஸ்டீவன்ஸ், ரெயினர் மரியா ரில்கே ஆகிய இருவரின் சௌந்தர்யம் மிக்க அடர்த்தியும் விரிவும் கொண்ட கவிதைகளைப் பாதி நேரம் விரும்பியும் இன்னொரு பாதி சமயம் ஒதுக்கியும் அல்லாடிக் கொண்டிருந்தேன். ஸ்படிகத்தை ஒத்த ஒளிமிகு கவிதைகளை அளித்திருந்த எமிலி டிக்கின்ஸன் மீது நான் கொண்டிருந்த அளவற்ற மரியாதையை என் போதாமையுடன் தந்தேன். எலியட்டின் வித்தியாசம் நிரம்பிய ஆழமான கவிதைகளைத் தவறவிட்டேன். இம்மாதிரி கஞ்சத்தனம் நிரம்பிய இயல்புகளை நான் பெற்றதற்கு காரணம் மற்றவர்களுக்குத் தரப்படும் மரியாதையை விட அதிகம் இந்த ஆளுமைகளுக்குத் தர வேண்டாம் என்னும் என் மனநிலைமைதான். மேலும் அரசியல் வன்முறையும் மக்களின் எதிர்பார்ப்புகளும் வேறு என்னை இத்தகைய கவிஞனாக நடமாட வைத்தது; கவிதையின் மீது அல்ல, மக்களின் எதிர்ப்பு ஒருவருக்கொருவர் விரோதத்துடன் அடித்துக் கொண்ட அரசியல் குழு மனப்பான்மையின் மீதுதான்.

இச்சூழலில் மனம் என்பது சாமுவேல் ஜான்சன் கூறிய படி ‘திட சித்தம்’ கொண்டதாய் இருக்க விரும்புகிறது. அதனுடைய எண்ண



ஓட்டங்களும் விசாரணைகளும் இதை ஆட்டங் காணச் செய்தாலும். பிரவசனங்களுக்கு உட்படாது பல்வேறு கருத்துக்களைப் பிரக்ஞை பரிசீலிக்கிறது. படுக்கையறையிலிருக்கும் சிறுவன் ஒரே நேரத்தில் வீட்டுக்குள் புழங்கும் வார்த்தைகளையும் பிபிசியின் ஒலிபரப்புகளையும் கேட்டு - நன்னெறி, அழகியல், ஒழுக்கம், அரசியல், ஐயுறவு மனப்பான்மை, கலையுணர்வு, தலைசிறந்தது, ஒரேமாதிரியானது, பின்காலனியாதிக்கம் என்று - பலவித ஆக்கிரமிப்புகளில் அலைப்புறுகிறான். இக்கட்டத்தில்தான் என் பத்தொன்பதாம் வயதில் டப்ளின் நகரத்துக்கு வெளியே தெற்கே இருந்த கோ விக்லோ என்னுமிடத்தில் குடியிருந்த என் சிறிய குடும்பத்துடன் தங்கினேன். அதிக ஒலி எழுப்பாத ரேடியோவுடனும் மழைக்காலத்தில் மரங்கள் எழுப்பும் கீதங்களைக் கேட்டபடியும் நாள்களைச் செலவழித்தேன். அப்போது என் சொந்த ஊரருகே நடந்த குண்டு வீச்சின் பயங்கரங்களைக் கேட்டு அதிர்ந்துவிட்டேன். 1930களில் ரஷ்யாவின் அளவற்ற கொடுமைகளுக்கு ஆளான ஓஸிப் மேன்டெல் ஸ்டாமின் இறுதிக்கணங்களை அறிந்த போது எதிர்க்கும் பலமில்லாத என் நிலமையை உணர்ந்தேன். ஆர்வமிருந்தும் போரிட முடியாத என் இயலாமையை வெறுத்தேன். என் மிக நெருங்கிய, மிக இனிமையான சுபாவமுடைய பால்ய கால நண்பன் விசாரணை எதுவுமின்றி தண்டிக்கப்பட்டதை அறிந்து மனம் வெதும்பினேன். மன்னிப்பைக் கோராத விசாரம் எதையும் எழுப்பாத கவிதையை எழுத விரும்பினேன். 'வெளிப்பாடு' என்னும் அக்கவிதை:

> விண்கல்லை என்னால் தொட முடியமென்றால்!
> பதிலாக செத்தைகளையும் உமிகளையும் இலையுதிர் காலக்
> குப்பைகளையும் மிதித்தபடி நடக்கிறேன்.
>
> மண்சுவராலான காம்பவுண்டில்
> ஒரு ஹீரோ. அவனது பரிசாக
> கயிறில் கட்டப்பட்ட சுழல் கற்கள்
> ஆதரவற்றவர்களுக்கென்று சீறுகின்றன.
>
> எவ்வாறு நான் இந்த நிலைக்குத் தள்ளப்பட்டேன்?
> பலமுறை என் நண்பனின் ஒளிமிகுந்த
> தீர்க்கமான அறிவுரைகளை நினைக்கிறேன்.
> பொறுக்காது
> பல பட்டறைக் கல் மூளைகள் என் மீது வெறுப்பை உமிழும்.
>
> என் கவிதைத் தொகுப்பை
> உட்கார்ந்து யோசித்துப் பார்க்கிறேன்:
> எதற்காக? செவிக்காக? மக்களுக்காக?
> புறம்பேசுபவர்களுக்காக?
>
> ஆல்டெர்ஸ் மரங்களூடே
> மழை பொழிகிறது!
> அதன் மென்மையான, உகந்த குரல்கள்
> கீழே விழுந்தவர்களை, அழிக்கப்பட்டவர்களைப் பற்றி
> விசனத்துடன் முணுமுணுக்கின்றன.
>
> நிறைவேறா ஆசைகள்.
> நான் கைதியோ ஒற்றனோ அல்ல.
> நானொரு அகதி.
> நீண்ட தலைமுடியுடன், யோசனையுடன்
> வலம் வரும் காலாட்படை வீரன்.
>
> படுகொலையிலிருந்து தப்பி விட்டேன்,
> மாறு வேடம் பூண்டு.
> அசைக்க முடியாதபடி நிற்கிறேன்.
>
> தீப்பொறியின் இளம் சூட்டை
> விரும்புபவர்கள்
> வாழ்விலே ஒருமுறை கிடைக்கும்
> வால் நட்சத்திரத்தின் குளிர்ச்சியைத்
> தவற விடுகிறார்கள்.

என் தலைமுறை மாணவர்களுக்கு மிகவும் பரிச்சயமான குறியீட்டுக் கவிதை இயக்கத்தின் உயிர்ப்பை உள்ளடக்கிய ஒரு கவிதையை, அமெரிக்கக் கவியான ஆர்ச்சிபால்ட் மெக்லே, "ஒரு கவிதை என்பது: உண்மை இல்லாதது" என்கிறார். உண்மையைச் சொல்ல முயலும், சற்றுச் சாய்வுடன் சொல்லும் கவிதை, நம்ப வைக்கும் ஆற்றல் உடையதாகவும் சரியாகவும் இருக்க முயலுகிறது. உட்புகுந்து நோக்கும் ஆழமான கவிதை, மகிழ்ச்சியைத் தருவதோடு புத்திசாலித்தனத்தையும் எதிரொலிக்க வேண்டும். அது உலக நடமாட்டத்தை, பல்வேறு முகங்களை எடுத்துக் காட்டுவதுடன், உலகை மறுசீராக்கும் முயற்சியில் ஈடுபடுவதாகவும் இருக்க வேண்டும். ஏதோ ஒரு அவசரத்தில் தவறுதலாக சுவிட்சின் மேல் கை பட்டதும் உயிர்த்தெழும் டிவி திரையைப் போல, மின்சார அதிர்ச்சி உடலில் பட்டதும் இதயம் சிலிர்ப்படைந்து மறுபடியும் சமநிலைக்கு வருவது போலக் கவிதை அதிர்வை எழுப்ப வேண்டும் என்று நாங்கள விரும்புகிறோம். லெனின்கிராட் சிறை வாசலில் பிய்த்தெடுக்கும் குளிரில் வரிசையில் நிற்கும் ஒருத்தியின் மனம் கொள்ளும் பயத்தை - ஸ்டாலின் அரசு தரப்போகும் தண்டனை எதுவோ



என்று - உங்கள் கவிதையில் இவற்றை வடித்துத் தர முடியுமா என்று கவி அன்னா அக்மடோவாவிடம் கேட்க விரும்புகிறோம். சற்று முன் காண்பித்த என் கவிதையை, கோ விக்லோவில் எழுதிய வரிகளை, 'அக்கவிதை வெளியுலக நிதர்சனத்தின் வெளிப்பாட்டைக் காண்பித்தும், உள்ளுணர்வுகளை மதிப்பேற்றியும் விளங்கிற்றா?' என்று நான் என்னைக் கேட்டுக்கொள்கிறேன்.

மேலே கூறிய நிதர்சனத்தின் வெளிப்பாடு, உள்ளுணர்வின் உந்துதல் நிரம்பிய மதிப்பு ஆகியவற்றை 1968-74 காலகட்டத்தில் அயர்லாந்தில் நிகழ்ந்த வலிமை முகுந்த மாற்றங்கள் நிரூபித்தன. இந்த மாறுதல்கள் நிகழ்வதற்காகக் காத்திருந்த காலம் நெடிய ஒன்று. அறுபதுகளின் பின்னாள்களில் நடந்த தெருப் போராட்டங்களினால் முன்பே நிகழ்ந்திருக்க வேண்டியது. அவ்வாறு நிகழாமல் இருக்கப் பல எதிர்ப்புச் சக்திகள் முன்னேற்பாட்டுடன் இயங்கின. ஐரிஷ் புரட்சி இயக்கத்தினரின் குண்டு வெடிப்புப் பயங்கரங்களை, கிறிஸ்துவ அறவோர் எதிர்த்து எழுப்பிய குரல், 1972ஆம் ஆண்டு டெர்ரியில் ஒரு ஞாயிறன்று படுகொலை நடத்திய ரத்த வெறி பிடித்த ஆங்கில ராணுவத்தினரை வெறுத்து எழுந்த ஒரு சாதாரண ஐரிஷ் குரல், இவற்றுக்கு நடுவே அரசும் சமூகமும் நம்பிக்கை தராத சூழலில் நின்ற சிறுபான்மையிருக்கு எழும்பாத குரல்களே முன் வந்து நின்றன. வட அயர்லாந்தின் மறுமலர்ச்சிக்கு மாற்றங்கள்தாம் வழிவகுக்க முடியும் என்பது ஒரு கவிஞனின் ஆணித்தரமான எண்ணமாக இருந்தது. ஐரிஷ் புரட்சியாளரின் வன்முறை வழிகள், மறுமலர்ச்சியைத் தடுத்து ஒழித்துவிடும் செயல்பாடுகளாக அமைந்துவிடும் என்ற உண்மையைக் காலம் உணர்த்த முயன்ற கட்டம் அது.

1974இல் ஆங்கில அரசு அல்ஸ்டர் உழைப்பாளிகளின் வன்முறைப் போராட்டத்துக்கு அடிபணியும் வரை, திறனுடைய மனிதர் எவரும் எது உய்விக்கத் தக்கது, எது அழிவை நோக்கிச் செல்வது என்ற சூழ்நிலையை நன்கு அறிந்திருந்தார். இதன் விளைவான நம்பிக்கையைத்தான் டபிள்யூ.பி.ஈட்ஸ் அரை நூற்றாண்டுக்கு முன்பே, "மெய்மைக்கும் நீதிக்குமான ஒரு எண்ணத்தைக் கைப்பற்றிக் கொள்" என்றார். 1994இல் ஏற்பட்ட சமாதான ஒப்பந்தத்துக்கு இருபது ஆண்டுகள் பிடித்த நிலையில் இத்தகைய நம்பிக்கைக்கு சாத்தியமே இல்லாதிருந்தது. எதையும் உருவாக்க இயலாத வன்முறை, கேடுகளை விளைவித்ததன் மூலம் ஒரு கால் நூற்றாண்டு மக்கள், இறந்து விட்ட வாழ்க்கையின் சோகப் பிடியில் இருந்து தப்பிக்க முடியவில்லை.

வட அயர்லாந்தின் சரித்திரத்தில் நெஞ்சைப் பிளக்கும் நிகழ்ச்சியாக 1976ஆம் ஆண்டு ஒரு ஜனவரி மாலையில் தொழிலாளர்களை ஏற்றி வந்த மினி பஸ் ஒன்று ஆயுதமேந்திய முகமூடி அணிந்த கும்பலால் நிறுத்தப்பட்டது. பயணிகளை வெளியே வந்து வரிசையாக நிற்குமாறு அது பணித்தது. வரிசையில் நின்றவர்களிடம், "உங்களில் கத்தோலிக்கர் யாராவது இருந்தால் வெளியே வந்து நிற்கவும்" என்று அந்தக் கும்பல் ஆணையிட்டது. வெளியே வந்து நின்ற ஒரு மனிதரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் புராட்டஸ்டண்ட்கள். அந்த மனிதர் வெளியே வர முயன்ற போது அருகில் இருந்தவர் அவரது கையை அழுத்தி, போக வேண்டாம் என்று தெரிவித்தார். அந்த அடர்ந்த குளிர் நிறைந்த மாலையில் வெளியே வர முயன்றவருக்கு அருகிலிருந்தவர் தெரிவிக்க முயன்றது, 'வேண்டாம் போகாதே, எங்களில் எவரும் உம்மைக் காட்டிக்கொடுக்க மாட்டோம், நகர வேண்டாம், நமது நம்பிக்கை பற்றி வேறு எவரும் அறிய வேண்டியதில்லை' என்று கூறியது போல இருந்தது. வந்திருந்த ஆயுதப் படையினரான புராட்டஸ்டண்ட் குழு தங்களைச் சேர்ந்தவர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிக்குப் பதிலடியாகக் கத்தோலிக்கர் மீது பாயும் எண்ணம் கொண்டவர்கள் என்று நினைக்கப்பட்ட போது, நடந்தது என்னவோ, அந்த ஒற்றை மனிதரை விட்டுவிட்டு மற்ற அனைவரையும் சுட்டுக் தள்ளியது. வந்தவர்கள் புராட்டஸ்டண்ட் தீவிரவாதிகளல்லர்; மாறாக அயர்லாந்து ராணுவப் புரட்சிப் படையினர்.

(தொடர்ச்சி 13ஆம் பக்கம்)

(10ஆம் பக்கத் தொடர்ச்சி)



சில சமயங்களில் சரித்திரம் என்பது இறைச்சிக் கூடம் என்பது போலத் தோற்றமளிக்கிறது. "கருணையற்ற பாதக சக்தியின் மிச்சம்தான் அமைதி" என்று சரித்திர இயலாளரான டாசிட்டஸ் கூறியது உண்மைதான். உதாரணமாக நான் குறிப்பிட்ட என் பால்ய கால அத்யந்த சிநேகிதன் விசாரணை எதுவுமின்றி ஒரு அரசியல் கொலையில் ஈடுபட்டவனுக்கு உடந்தையாக இருந்தான் என்ற சந்தேகத்தில் தண்டிக்கப்பட்டது ஞாபகத்துக்கு வருகிறது. அப்படியே அவன் உதவியிருந்தாலும் வருங்காலத்தில் வன்முறையற்ற ஒரு சமூகம் கிளம்பி எழுந்து வரும் என்ற நம்பிக்கையில் செயல்பட்டிருப்பானென்னும் அதிர்ச்சியளிக்கும் ஒரு சிந்தனை என்னுள் எழுந்தது. விண்மீன்களை ஸ்பரிசத்த குளிர்ந்த தருணமென ஓர் உள்வெளி அதிர்வை ஏற்படுத்தி, மனிதர்களின் சிந்தனையை, வாழ்வை நடத்திச் செல்ல வேண்டிய வழி இதுதான் என்று உணர்த்தியது போலிருந்தது. ஆனால், அது ஒரு க்ஷணம்தான். நாம் விரும்பும் எதிர்காலம் என்பது, நடுச் சாலையில் அந்தக் கத்தோலிக்கர் எதிர்கொண்ட, கை அழுத்தப்பட்ட நொடியைத்தானே அன்றி அதை அடுத்து நிகழ்ந்த துப்பாக்கிச் சூட்டை அல்ல. ஒப்பற்ற சிதைவுறாத தருணம் என்பது இனிமையைக் கூட்டும் இசையைப் போன்றது.

*(அடுத்த இதழில் தொடரும்)*

"ஸிந்துஜா" weenvy@gmail.com



சீமஸ் ஜஸ்டின் ஹீனி (1939-2013), ஒரு ஐரிஷ் கவிஞர், நாடக ஆசிரியர், மொழிபெயர்ப்பாளர். 1995ஆம் ஆண்டு இலக்கியத்திற்கான நோபல் பரிசு பெற்றார். ஐயர்லாந்து நாட்டின் கலாச்சார அடையாளங்களில் ஒருவரான ஹீனி, ஐயர்லாந்தில் வில்லியம்.பி.யீட்ஸ்க்கு பிறகு தோன்றிய மிக முக்கியமான கவிஞர் என்று விமர்சகர்களால் பாராட்டப்பட்டவர். அமெரிக்க அதிபர் ஜோ பைடனால் அடிக்கடி மேற்கோள் காட்டப்படும் அளவுக்கு சீமஸ் ஹீனியின் பிரபலம் இருக்கிறது. இவரது சிறந்த படைப்புகளில் ஒன்றாக 'ஒரு இயற்கைவாதியின் மரணம்' (1966) குறிப்பிடப்படுகிறது. இவரது சில கவிதைகள் தமிழில் மொழிபெயர்ப்பாகி சிற்றிதழ்களில் வெளிவந்துள்ளன.

# சீமஸ் ஹீனி கவிதைகள்

## தமிழில்: தீபா

1

பிளாக்பெர்ரி பழங்களைப் பறித்தல்

ஆகஸ்ட் மாத இறுதியில், கடும் மழையும் சூரியனும்
ஒரு வாரம் முழுக்கத் தொடர, பிளாக்பெர்ரிகள் பழுக்க ஆரம்பிக்கும்.
இறுகிய முடிச்சுப் போன்ற, சிவப்பு மற்றும் பச்சை நிறக் காய்கள் நடுவே
முதலில் ஒரேயொரு ஊதா நிறத் திட்டு தெரியும்.
நீ அந்த முதல் பழத்தை உண்டாய். அதன் சதை இனித்தது
கெட்டியான வைன் போல: அதனுள்ளிருந்த கோடையின் ரத்தம்
நாக்கில் கறையாய் படிந்து ஆசையை தூண்டியது
மேலும் பறிப்பதற்கு. பிறகு, சிவப்பு பழங்களிலும் மைநிறம் ஊற அந்த பசி
நம்மை பால் கலன்கள், பட்டாணி டப்பாக்கள், ஜாம் குடுவை இவற்றோடு
காட்டு ரோஜாக்களின் முட்கள் தோலைக் கீறும், ஈரப்புற்கள் நம் காலணிகளை அழுக்காக்கும் இடங்களுக்கு அனுப்பியது
வட்டமான வைக்கற்புல் வெளிகள், சோளக்காடுகள் மற்றும் உருளைக்கிழங்கு வயல்கள்தோறும்
நாம் சுற்றி அலைந்தோம். உலோகக் களன்கள் நிறைகிறவரையில் பழங்கள் பறித்தோம்.
க்ளிங்கென்று ஒலியெழுப்பிய கீழ்பகுதி பச்சைப் பழங்களால் நிறைய
மேற்பகுதியில் பெரிய கருத்த உருண்டை பழங்கள் குவிந்தன,
ஒரு தட்டு முழுக்க கண்களை அடுக்கி வைத்தது போல. நம் கைகள் எரிச்சலில் காந்தலெடுத்தன,
முட்கள் குத்தி. நம் உள்ளங்கைகள் பிசுபிசுப்பேறின, நீலத்தாடிக்காரனின் உள்ளங்கைகளைப் போல.

புதிய பெர்ரி பழங்களை நாம் தொழுவத்தில் பதுக்கினோம்.
ஆனால், தண்ணீர்தொட்டி நிறைந்ததுமே, நம் கண்களில் பட்டுவிட்டது, ஒரு ரோமம்,
ஓர் எலியின் வண்ணத்தில் பூஞ்சை. நம் சேகரிப்பை ஒட்டி அரிக்கத் தொடங்கிற்று.
பழச்சாறிலும் வாடையடிக்கத் துவங்கியது. புதர்ச்செடிகளிலினின்று பிரித்து கொண்டு வந்ததுமே,
பழம் நொதிக்கலாகிற்று. இனிப்பான சதை புளிக்கத் தொடங்கியது.
எனக்கு உடனடியாக அழத் தோன்றிவிடும். இது நியாயம் அல்ல.
அழகிய கொள்கலன்கள் முழுக்க அழுகல் நாற்றம் எழுவது.
ஒவ்வொரு வருடமும் அப்படி நடக்கக்கூடாது என விரும்புவேன், அப்படித்தான் நடக்கும் என்று அறிந்தே.

---

*நீலதாடிக்காரன் - பிரெஞ்சு நாட்டுப்புறக் கதைகளில் வரும் கதாபாத்திரம். மனைவிகளை கொலை செய்பவன்.

2

பாடல்

குறுக்குச் சாலைக்கும் மையச் சாலைக்கும் நடுவே
உதட்டுச் சாயம் பூசிய பெண் போல ஒரு ரோவன் செடி.
நாணற்புதர்களின் மத்தியில்
நீர் சொட்டும் ஈரமான தொலைவில் ஆல்டர் மரங்கள்.

அந்த வட்டாரத்தின் சேற்று பூக்களும் அங்கே இருக்கின்றன
கூடவே, துல்லியமான சுருதியில் அழிவற்ற சூரியகாந்தி மலர்களும்.
உடனே, அந்த தருணத்தில் பறவை பாடத் தொடங்குகிறது
சுற்றி நிகழ்பவையின் இசைக்கு மிக நெருக்கமாக.

## 3
## 1.1.87

ஆபத்தான நடைபாதைகள்.
ஆனால், இந்த வருடத்துப் பனியை நான் எதிர்கொள்வது,
என் தந்தையின் கைத்தடியினால்.

## 4
## தீபகற்பம்

இதற்கு மேல் சொல்வதற்கு ஒன்றுமேயில்லாதபோது, வெளியேறி வெறுமனே வாகனத்தை ஓட்டிச் செல்லுங்கள்
தீபகற்பம் முழுக்க ஒரு நாளில் சுற்றுங்கள்.
வானம் உயரமாக இருக்கிறது, ஓடுபாதைக்கு மேலே இருப்பது போல
நிலத்திலோ அடையாளச் சின்னங்களே இல்லை. எனவே, நீங்கள் எங்கும் போய் சேர முடியாது

எனினும் கடந்து செல்லுங்கள், சறுக்கும் நிலச்சரிவின் பாதைகளில்.
அந்திவேளையில், தொடுவான் கோடுகள் கடலையும் மலைக்குன்றையும் விழுங்குகின்றன.
உழப்பட்ட நிலம் வெள்ளையடித்த வீட்டுக் கூரையை மூடுகிறது.
உடனே, நீங்கள் மீண்டும் இருட்டில் விழுகிறீர்கள். இப்போது நினைவில் மீட்டுங்கள்.

ஒளியில் மின்னும் கடற்கரை. மரத்துண்டின் நிழல்.
கந்தலாய் துண்டுப்படும்படி அலைகள் திரும்பத் திரும்ப மோதும் பாறை.
செயற்கைக் கால்கள் போல தம் கால்களையே பகட்டாக ஒடித்து நிற்கும் பறவைகள்.
பனிமூட்டத்துக்குத் தம்மை உயர்த்தி நகர்த்தும் தீவுகள்.

கடைசியில், இன்னமும் சொல்வதற்கு ஒன்றுமேயில்லாமலேயே,வாகனத்தை வீடு நோக்கி ஓட்டுங்கள்.
ஒரேயொரு வித்தியாசம். அனைத்து நிலக்காட்சிகளையும் நீங்கள் புரிந்துகொள்ள ஆரம்பிப்பீர்கள்
இதன்வழியே: பொருட்கள் தம் சொந்த வடிவில் களங்கமில்லாமல் காணக் கிடைக்கும்,
நீரும் நிலமும் தொலைதூர முடிவில் இருக்க.

## 5
## இன்றிரவு விக்லோவிலும் ஒரு நாய் அழுது கொண்டிருந்தது

மனிதர்கள் மரணத்தை பற்றி அறிந்துகொண்டதும்
அவர்கள் ஒரு செய்தியோடு அந்த நாயை சுக்வுவிடம் அனுப்பி வைத்தார்கள்:
மீண்டும் ஜீவிதத்தின் வீட்டுக்குத் திரும்ப அவர்கள் அனுமதி கோரினார்கள்
எரிந்த மரக்கட்டை புகையாய் மறைவது போலவோ அல்லது
சாம்பல் காற்றில் கரைந்து ஒன்றுமில்லாமல் ஆவது போலவோ
என்றென்றைக்குமாய் தொலைந்துபோக அவர்கள் விரும்பவில்லை
மாறாக, தங்கள் ஆன்மாக்கள் அந்திக்கருக்கலில் மந்தையாய் அலைவதைப் பார்த்தார்கள்
கூவியபடி அவைச் சென்றன, அதே பழைய சேவல்கள் நோக்கியும்

ஒவ்வொரு நாளும் தோன்றும் அதே பழைய சிறகு நீட்டல்கள் மற்றும் வெளிச்சக் காற்றை நோக்கியும்
மரணம் என்பது காட்டில் செலவழிக்கும் ஓர் இரவை போல இருக்க வேண்டும்
முதல் வெளிச்சத்திலேயே அவர்கள் ஜீவிதத்தின் வீட்டுக்கு திரும்ப வேண்டும்
(இவை எல்லாவற்றையும் அந்த நாய் சுக்வுவிடம் சொல்ல வேண்டும்)

ஆனால், நடுவே மரணமும் மனிதர்களும் அந்த நாய்க்கு இரண்டாம்பட்சமாகிவிட்டது
பட்டப்பகலில் நதியின் தொலைதூரக் கரையில் நின்று
தன்னை பார்த்து குரைத்த இன்னொரு நாயை நோக்கி
அது குரைக்கத் தொடங்கி வழி மாறிவிட்டது
இப்படியாகத்தான் சுக்வுவை முதலில் வந்தடைந்தது, தேரை
அந்த நாய் சொல்ல வேண்டியது
ஆரம்பத்திலேயே தேரையின் காதில் விழுந்திருந்தது. 'மனிதர்கள்', என்றது தேரை
(இவ்விடத்தில் தேரை முழுமையாக நம்பப்பட்டது)
'மனிதர்கள், மரணம் என்றென்றைக்குமாய் நிலைத்திருக்க விரும்புகிறார்கள்'

பறவைகள் உடலில் மனித ஆன்மாக்கள் தன்னை நோக்கி
சூரிய அஸ்தமனத்தில் எழும் கரும்புள்ளிகள் போல வருவதை சுக்வு கண்டார்
ஜீவிதத்தின் வீட்டுக்குத் திரும்ப முடியாத பாதையில்
மரங்களோ பறவைகளோ இல்லாத இடத்துக்கு அவை சென்றன
சுக்வுவின் மனம் ஒரே நேரத்தில் ஒளியில் சிவந்தும் இருட்டாகவும் மாறியது
அந்த நாய் மீண்டும் வந்து சொல்லக்கூடிய எந்த விஷயமும்
சுக்வுவின் அப்பார்வையை மாற்ற முடியாது.
மகத்தான உயிர்களையும் மகத்தான காதல்களையும் மறையச் செய்தது பேரொளி.
தேரை சேற்றில் இருக்க, சவத்தின் வீட்டுக்குப் பின்னால் அந்த நாய் இரவெல்லாம் ஓலமிடுகிறது.
-----------------------------------------------------------------------------------

*நைஜீரியாநாட்டின்இனக்குழுகளில்ஒன்றானஇக்போவின்(Igbo)கடவுள்சுக்வு(Chukwu).சூரியவடிவானஅக்கடவுள்பற்றியதொன்மத்தின்மறுஉருவாக்கம் இக்கவிதை. விக்லோ என்பது ஐயர்லாந்தில் ஒரு மாவட்டம்,

## 6
## கிராப்பிகளுக்கு ஓர் இரங்கற்பாடல்

எங்கள் கனத்த மேலங்கிகளின் பாக்கெட்டுகள் முழுக்க பார்லி விதைகள் நிறைந்திருந்தன.
எங்கள் சொந்த நாட்டிலேயே நாங்கள் திடீரென்று அவசரமாக இடம்பெயர வேண்டியிருந்தது.
இடப்பெயர்விலோ சமையற்கட்டுகள் கிடையாது. ஓய்வு முகாம்கள் கிடையாது.
பாதிரியாரும் விலைமகளோடு புதரில் ஒளிந்திருக்க வேண்டும்.
அணிவகுப்புகளில் பரிச்சயமில்லாத மக்கள் - பயணத்தில்
ஒவ்வொரு நாளும் புதுப்புது சூழ்ச்சிகள் நிகழ்வதைக் கண்டுபிடித்தோம்
ஈட்டிகளால் குதிரை கடிவாளங்களையும் சிப்பாய்களையும் குத்தித் தள்ளிவிட்டு முன்னேறினோம்
கால்நடைகளை காலாட்படைக்குள் துரத்திவிட்டு
குதிரைப்படைகளை வீழ்த்துவதற்காக வேலிகளூடே பின்வாங்கினோம்
அதுவரை, வினிகர் மலையில் விதியின் கடைசிச் சந்திப்பு எங்களுக்காய் காத்திருந்தது
பீரங்கிகள் நோக்கி கதிர் அரிவாள்களை வீசியபடி ஆயிரக்கணக்கானோர் மடிந்தனர்
மலைக்குன்று சிவப்பாய் மினுங்கியது, உடைந்த மனித அலையில் மூழ்கி.

மூடுதுணியோ சவப்பெட்டியோ இல்லாமல் எங்களை அவர்கள் புதைத்தார்கள்
பிறகு ஆகஸ்ட் மாதம் எங்கள் கல்லறையிலிருந்து பார்லி விதைகள் முளைத்தெழுந்தன.

---

*பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக ஐரிஷ் போராளிகள் 1798 இல் முன்னெடுத்த கிளர்ச்சியையும் அதில் இறந்தவர்களையும் பற்றியது இக்கவிதை. உயர்குடிகளின் செயற்கை தலைமுடி அணியும் வழக்கத்திற்கு எதிராக பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரிஷ் தேசியவாதிகள் கிராப் முடி வெட்டிக் கொண்டார்கள். அதனால் அவர்களுக்கு 'கிராப்பி' (Croppy) என்று பட்டப் பெயர் வந்தது.

## 7
## போர் கவிதை

மனிதர்கள் துயருறுகிறார்கள்.
ஒருவரையொருவர் கொடுமைக்குள்ளாக்குகிறார்கள்.
மனிதர்கள் காயப்படுகிறார்கள். கடினமாகிறார்கள்.
ஒரு கவிதையோ அல்லது ஒரு நாடகமோ அல்லது ஒரு பாடலோ
நிகழ்த்தப்பட்ட, அனுபவிக்கப்பட்ட
ஒரு தவறை முழுமையாக சரி செய்துவிடமுடியாது

வரலாறு சொல்கிறது,
கல்லறையின் இந்தப் பக்கம் நின்று நம்பிக்கை கொள்ளாதீர்கள்
ஆனால், வாழ்விலே ஒருமுறை
நீண்ட காலம் ஏங்கிக் காத்திருந்த
நீதியின் அலை உயரே எழும்
அப்போது வரலாறும் நம்பிக்கையும் இசைந்து செல்லும்

எனவே பழிவாங்குதலின் தூரத்து எல்லையில் இருந்து
அந்த மாபெரும் கடல் மாற்றத்திற்காக நம்பிக்கை கொள்ளுங்கள்
தொலைதூரக் கரையை
இங்கிருந்து அடைந்துவிட முடியும் என நம்புங்கள்
அற்புதங்களில் நம்பிக்கை கொள்ளுங்கள்
தீர்வுகளிலும் மாயக் கிணறுகளிலும் நம்பிக்கை கொள்ளுங்கள்



இளம் வயது சீமன் ஹீனி,
அவரது கவிதைகளின் வரைவு

அற்புதத்தை சுய-சிகிச்சை என்று அழையுங்கள்
உச்சரிப்போ சுய-வெளிப்பாடு
உணர்ச்சியையோ இரண்டு தடவை பார்க்க வேண்டும்.

தீ, மலை மேல் நிற்குமெனில்,
மின்னலும் புயலும் நிகழுமெனில்,
வானிலிருந்து கடவுள் பேசுகிறாரெனில்,
அதன் அர்த்தம், புதிய வாழ்க்கை தன் பருவத்தில் எழுப்பும்
பிறப்பின் அழுகையையும் கூக்குரலையும்
யாரோ ஒருவர் கேட்டுக் கொண்டிருக்கிறார் என்பதே

அதன் அர்த்தம், வாழ்விலே ஒருமுறை
நீதி உயரே எழும் என்பதே
அப்போது வரலாறும் நம்பிக்கையும் இசைந்துச் செல்லும்

நன்றி: அகழ்

# வெள்ளவாய்க்கால் வைரவர்

இளங்கோ

ஓவியம்: பிரான்சிஸ் நியூட்டன் சோசா

*1*

மூத்தண்ணையைப்பற்றிஎப்போதுநினைத்தாலும் வைரவர்தான் நினைவுக்கு வருவார். இன்னொரு விதமாய்ச் சிந்தித்தால் அவரே வைர வரைப் போலத்தான் இருப்பார். மூத்தண்ணையின் முழுப்பெயர் என்னஎன்பது ஊரில் ஒருவருக்கும் தெரியாது. அம்மாவிற்கு ஊரிலே அவரின் பதின்ம நாட்களிலிருந்தே மூத்தண்ணையைத் தெரியும். அவர் மூத்தண்ணை என்று அழைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்து நாங்களும் அவரை அப்படியே கூப்பிடத் தொடங்கினோம். மூத்தண்ணை அதிகமாய் இரவு வேளைகளில்தான் எங்கள் வீட்டுக்கு வருவார். இர ண்டு காற்பாதங்களையும் துணியால் சுற்றிக் கட்டி, கால்கள் துணிக்குவியலுக்குள் மறைந்திருக்கும். நடந்து நடந்து அவை அழுக்கேறி யானையின் பாதங்கள் போல மாறியிருக்கும். ஆனால், மழையோ வெயிலோ என்னகாலநிலையாய் இருந்தால் கூடமேலுடம்பில் ஒரு உடுப்புக் கூட அணியமாட்டார்.

நீண்டநாள் துவைக்காதவேட்டியோடு தோளில் ஒரு உரப்பையைக் காவியபடிதான் எங்கள் வீட்டுக்கு வருவார். அந்தஉரப்பைக்குள் என்னஇருக்கிறது என்று ஒருபோதும் சொல்லமாட்டார். நாங்களும் அதற்குள் என்னஇருக்கிறதென்பதைப் பார்க்கமுய ற்சித்துக் கொண்டிருப்போம். அவரோ அதைக் கிட்ட நெருங்கஎங்களை விடமாட்டார். தானியம் பொறுக்க வரும் பறவைகளைத் துரத்துவதுபோலஎங்களைச் 'ச்சூசூ' எனவிரட்டிக் கொண்டேயிருப்பார். குளிக்கப் போகும்போது கூடஅந்தஉர ப்பையைத் தூக்கிக் கொண்டுதான் கிண ற்றடிக்குச் செல்வார்.

மூத்தண்ணை எங்கள் வீட்டை வ ந்துவிட்டார் என்றால் அவர் இரவில் குளிக்கும் குளியல் ஊர் முழுவதற்கும் அவ ரின் வரவை அறிவித்துவிடும். பேயொன்று தண்ணியை நள்ளிரவில் விடாது இறைக்கிற மாதிரி ம னுசன் ஒரு மணித்தியாலத்துக்கு மேலாய்த் துலாக்கிண ற்றில் அள்ளியள்ளிக் குளிக்கும். 'என்னமூத்தண்ணை, இப்படியா இரவு நேரத்திலை குளிப்பது?' என்று அம்மா கேட்டாலும், 'என்னசெய்யபிள்ளை, எப்படிக் குளித்தாலும், மனசிலை இருக்கிறஊத்தை போகிற மாதிரிக் காணவில்லை' என்பார்.



ஒருநாளும் மூத்தண்ணை குளிக்காமல் சாப்பிட உட்காரமாட்டார். அம்மா போட்டுக் கொடுக்கின்ற தேநீரைக் குடித்தபடி கொஞ்சநேரம் இருந்து ஊர்ப்புதினம் கதைத்துவிட்டு நேரே கிணற்றடிக்குப் போய்விடுவார். நேரம் காலம் பார்க்காது மூத்த ண்ணை வருவதால் அதிகமாய் நாம் சாப்பிட்டு எஞ் சியிருப்பதைத்தான் அவருக்கு சாப்பிடக் கொடுக்க முடியும். அவர் அதைச் சாப்பிடுகின்றவிதத்தைப் பார்த்தால் அவர் நிறையநாட்கள் ஒழுங்காய்ச் சாப்பிடாது அலைந்திருக்கின்றார் என்பது விளங்கும்.

என்னை எப்போது கண்டாலும் தலையில் உச்சிமோர்ந்து கொஞ்சவருவார். நான், 'மூத்த ண்ணை கிட்டவரவேண்டாம். ஒரே நாத்தம் வீசுகிற து. குளித்துவிட்டு வாங்கோ' என்று சொல்லிக் கொண்டு தூரஓடிவிடுவேன். ஆனால், மூத்தண்ணை ஏதாவது கதை சொல்லப்போகின்றார் என்றால் மட்டும் அடம்பிடிக்காது பக்கத்தில் போய் அமர்ந்து விடுவேன். மூத்தண்ணையின் முதற்கதை எப்போதும் என்னைக் காப்பாற்றியகதையாகத்தான் இருக்கும். அந்தக் கதையைப் பலமுறை கேட்டாயிற்று, வேறு கதைகள் சொல்லுங்கள் என்றாலும், காப்பியங்களுக்கு முன்னிருக்கும் கடவுள் வாழ்த்துப் போலஅதைச் சொல்லாமல் மற்றக் கதைகளுக்கு மூத்தண்ணை நகர மாட்டார்.

அந்தகதை இதுதான்; ஒருமுறை ஊரில் இருந்தவைரவர் கோயிலடிக்கு நான் ம ச்சான் மச்சாள்மாரோடு போயிருக்கிறேன்.




நாங்கள் அங்கேயிருந்ததேமாப்பூ மரத்திலேறி ஓடிப்பிடித்து விளையாடியிருக்கின்றோம். ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் மரத்தின் மேலே இருந்தநான் தவறி கீழே விழுந்திருக்கிறேன். விழுந்தஅதிர்ச்சியில் நான் மூச்சிழந்து போயிருக்கிறேன். மச்சானும் மச்சாளும் திகைத்துப் போய் நிற்கநான் விழுவதைப் பார்த்த மூத்தண்ணைதான் தூக்கிக்கொண்டு மாமா வீட்டுக்கு ஓடியிருக்கிறார். அந்தக் கதையைச் சொல்லிவிட்டு, ‘அன்று நானில்லாவிட்டால், இன்று நீ உயிரோடு இல்லை’ என்பார். ‘சும்மா விசர்க்கதை கதைக்காம ல் வேறு கதை இருந்தால் சொல்லுங்கோ’ என்று அவர் நூறாவது தடவையாகச் சொல்லும் இந்தக் கதையை நான் அலட்சியப்படுத்துவேன்.

அப்படி ஒரு நாள் அவர் விரித்துச் சொன்ன வைரவரின் கதை சுருக்கம் இது. எங்கள் அம்மாவின் ஊரில் ஒரு தாயும் மகளும் தனியே வாழ்ந்து கொண்டிருந்தார்கள். கோயில் கருவறையில் நாங்க ள் பார்க்கும்போது சூலாயுதமாக இருக்கும் வைரவ ர், நள்ளிரவுகளில் ஊரையும் பெண்களையும் காப்ப தற்காய் ஊருலாச் செல்கின்றவர்தானே. இதை அறியாமல் ஒரு கள்ளன் அந்தத் தாயும் மகளும் தனியே இருந்தவீட்டில் திருடவந்திருக்கின்றான். எல்லோரும் நித்திரையில் இருந்தபோது நகைகளைக் களவாடிக்கொண்டு வெளியில் வந்ததிருடனை கோவணத்தோடும் லாந்தர் விளக்கோடும் ஊருலாச் சென்ற வைரவர் கண்டிருக்கின்றார். பிறகென்ன, வைரவ ர் அடியும் உதையும் கொடுத்து நகைகளை மீட்டு திருடனின் சாரத்தையும் அவிழ்த்து வெறும் கோவ ணத்தோடு மட்டும் ஓடஓடத் துரத்தியிருக்கிறார். வைரவருக்கு வருடந் தவறாது வேள்வி கொடுக்கின்ற ஊர்களில் ஒரு கெட்டவிசயமும் நடக்காதென்பார் உறுதியாய் மூத்தண்ணை.

நான் பின்னேரங்களில் விளையாடப் போகின்ற போது மற்றப் பெடியங்கள், ‘என்னடா உங்கடை வீட்டுக்கு மட்டும் எல்லாப் பைத்தியக்காரர்களும் தேடித்தேடி வருகின்றார்கள்’ எனஎன்னைக் கேலி செய்வார்கள். நானும் விடாமல், ‘மூத்தண்ணை ஹாஹா என்று அவ்வப்போது உரத்தகுரலில் சிரிப்பாரே தவிர, அவர் மற்றபடி நோமல்தான், என க்கு நிறையக் கதைகளைச் சுவாரசியமாகச் சொல்கின்ற வர்’ எனஅவர்களின் நக்கலை அடக்குவேன்.

வைரவர் மேல் ஊர்ப் பெண்களுக்கு ஆசை வந்த தோ தெரியாது, ஆனால், மூத்தண்ணை தெளிவாய் இருந்தகாலங்களில் நிச்சயம் அவரது ஆகிருதி மீது பலபெண்களை ஆசைப்பார்வை வீச வைத்திருக்கும். ஒழுங்காய்ச் சாப்பிடாது, ஊரூராய் சிவன் போக்கு சித்தன் போக்கெனஅலைந்து கொண்டிருந்தகால

த்தில் எனக்கு அறிமுகமானமூத்தண்ணையின் உட ம்பு, அப்போது கூட ஒரு தேக்கமரத்தைப் போல திடகாத்திரமாய்த்தான் இருந்தது. சும்மா நட க்கும்போதே நிலம் அதிரத்தான் நடந்து கொள்வார். நான் பாரதச் சுருக்கத்தை வாசித்தபோது, அதில் பீமன் பாத்திரத்திற்கு பொருத்தமானவராய் மூத்த ண்ணையைக் கற்பனை செய்துகொள்வேன்.

போர் மூர்க்கமாக, நாங்கள் பகலை எங்கள் ஊரிலும் இரவுகளை வேறு ஊர்களிலும் சென்று கழித்துக் கொண்டிருந்தகாலம். ஏற்கனவே - பிற ருக்கு இடைஞ்சலாய் - தெரிந்தவர்களின் வீட்டின் ஒரு பகுதியில் வசித்துக் கொண்டிருந்தஎங்களுக்கு அப்போது மூத்தண்ணையை இரவில் வரவேற்பதில் பலவிதசிக்கல்கள் இருந்தன. அம்மாவுக்கு அப்படி மூத்தண்ணைக்குச் சாப்பாடு கொடுக்காது தேநீர் மட்டும் கொடுத்து உடனேயே அனுப்புவதில் கஷ்ட மாயிருந்தது. மூத்தண்ணைக்கும் அலுப்புப் போக இரவில் குளிக்காது, வாய்க்குள் சாப்பாடு துளியும் உள் இறங்காது. அந்தக் காலங்களில் மூத்தண்ணை கதைகளை எனக்கு ஆறுதலாகச் சொல்லஅவருக்கோ அல்லது அவரது கதைகளைக் கேட்கஎனக்கோ நேர ம் வாய்க்கவில்லை.

என்னோடுகிரிக்கெட்விளையாடிக்கொண்டிருந்த வர்களில் ஒவ்வொருத்தராய் இயக்கத்துக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். எனக்கு இயக்கத்துக்குப் போக விருப்பமாகவும், அதை விடஆர்மியை எப்படித் துப்பாக்கியால் சுடுவதென்றபயம் மேலோங்கியும் இருந்தது. மேலும், ஆஸ்மா வந்தால் அம்மாவைப் போலபத்திரமாய்க் கவனிக்கஇயக்கத்தில் வச தியிருக்குமா எனயோசித்துப் பார்த்ததில் நிறையக் குழப்பமே எனக்கு வந்தது.

*2.*

மூத்தண்ணை ஏன் இப்படி கொஞ்சம் வித்தியாசமானவராக இருக்கின்றார் என்று அம்மாவிடம் அவ்வப்போது கேட்டிருக்கின்றேன். மூத்தண்ணையும் எல்லோரையும் போல சாதாரணமாகத்தான் தொடக்கத்தில் இருந்திருக்கின்றார். ஒருமுறை யாழ் நகருக்குப் போகும்போது யோகர் சுவாமியைக் கொழும்புத்துறையில் சந்தித்திருக்கின்றார். அன்றிலிருந்து அவரின் போக்கே மாறிவிட்டிருக்கின்றது. யோகர் சுவாமிகள் நடந்து கால்களால் அளக்காத இடம் யாழ்ப்பாணத்தில் இல்லையெனச் சொல்வார்கள். அப்படி யோகர் சுவாமிகள் அலைந்து திரியும் இடங்களுக்கெல்லாம் மூத்தண்ணையும் பின்னால் போயிருக்கின்றார். ஒருமுறை யோகர் சுவாமிகள் திரும்பி மூத்தண்ணையைப்பார்த்து,'யாரடா நீ! உனக்குள்ளே பாரடா,எனக்குப்பின்னால்வராதே' என்று அதட்டிச் சொன்னவுடன் யோகரைப் பின்தொடர்வதை மூத்தண்ணை கைவிட்டிருக்கின்றார். அதன் பின்னே தனியே ஊர் ஊராகத் தன்போக்கில் அலையத் தொடங்கியிருக்கின்றார்.

எப்போதும் இரண்டு மூன்று உரப்பைகளில் எதையோ நிறைத்தபடி வரும்மூத்தண்ணையைத்தான் நான் பார்த்திருக்கின்றேன். எங்கள் வீட்டுக்கு வந்து பேய்க் குளிப்பு போட்டுவிட்டு அடுத்தநாள் அவர் பற்றையம்மன் கோயில் பக்கமாய்ப் போவதை அவதானித்திருக்கிறேன். வருடத்துக்கு ஒருமுறை மட்டுமே குளிர்த்தி நடக்கும் பற்றையம்மன் கோயில் மூத்தண்ணை தேடும் தனிமைக்கு ஏற்ற இடமாக இருந்திருக்கின்றது. சிலபொழுதுகளில் ஒன்றிரண்டு நாட்கள் ஊருக்குள் வராது பற்றையம்மன் கோயிலுக்குள்ளேயே இருந்துவிடுவார்.

இவ்வாறு மூத்தண்ணை பற்றையம்மன் கோயிலுக்குள் போய், வெளியே வராது தன்னைக் கரைத்துக் கொள்ளும் பொழுதுகளில் அம்மா அவருக்கு ஏதேனும் சாப்பாடு செய்து என்னை கொண்டுபோய்க் கொடுக்கச் சொல்வார். சும்மா நாட்களிலேயே இருள் மூடியிருக்கும் பற்றையம்மன் கோயிலுக்குப் போகப் பயத்தில் இருக்கின்ற நான் மூத்தண்ணையைத் திட்டியபடி அங்கே போவேன். இந்த மனுசன் என்ன நடந்ததென்று நான் அறியாப் பருவத்தில் தேமாப்பூமரத்திலிருந்து விழுந்த என்னைக் காப்பாற்றிய பாவத்துக்காய் இதையெல்லாம் செய்ய வேண்டியிருக்கின்றதே என என்னைப் பிறகு ஆற்றியும் கொள்வேன்.

நான் சாப்பாட்டுடன் பற்றையம்மன் கோயிலுக்குள் நுழைகின்றபோது பார்க்கின்ற மூத்தண்ணை வேறொருவராகக் காட்சியளிப்பார். அவ்வளவு அமைதியும் சாந்தமும் அவரின் முகத்தில் தெளிவாகத் தெரியும். கால்களை அகட்டி தடக் தடக்கென்று நடக்கின்ற பதற்றம் வரச்செய்கின்ற ஒருவராக அவர் அங்கே இருக்கவே மாட்டார். அநேகமாக அங்கிருக்கும் வேம்ப மரமொன்றின் கீழ்தான் அமர்ந்திருப்பார்.இல்லாவிட்டால் தரைக்கு நொந்துவிடுவோமோஎன்பதுபோன்றமென்மையுடன் அங்கும் இங்கும் நடந்துகொண்டிருப்பார். மற்ற நேரங்களைப்போல, ஆஹா ஆஹா என்று சிரித்தபடி இருக்கும் மூத்தண்ணை,இவ்வாறான பொழுதுகளில் என்னோடு அதிகம் பேசுவதில்லை. சாப்பாட்டை கீழே வைத்துவிட்டுப் போ என்பதைச் சைகை மொழியில்தான் காட்டுவார். நான் அவர் சொல்கின்ற இடத்தில் சாப்பாட்டை வைத்துவிட்டு காற்றைவிட விரைவாக அந்த இடத்தை விட்டுப் பறப்பேன்.

இவ்வாறு தான் உண்டு, தன் சித்தம் உண்டு என்று தன்பாட்டில் இருந்த மூத்தண்ணைக்கு இந்திய இராணுவம் நமது ஊருக்குள் வந்தபின்தான் எல்லாச் சிக்கல்களும் வரத்தொடங்கின. இப்போதெல்லாம் நினைத்த நேரத்துக்கு எல்லாம் மூத்தண்ணையால் ஊருக்குள்வரமுடியாதிருந்தது.நள்ளிரவு ஆந்தையைப் போல ஊர் சுமுகமான காலத்தில் இருக்கையில்

வந்ததைப்போன்று,இப்போதும்நேரகாலம்தெரியாது அவர் நுழைகையில் இந்தியன் ஆர்மி இயக்கத்தின் உளவாளி என்று நினைத்து கண்டமேனிக்கு மூத்தண்ணையை உதைக்கத் தொடங்கியது. எவ்வளவு அடித்தபோதும், 'எப்போதோ முடிந்த காரியம், ஒரு பொல்லாப்புமில்லை' என்கின்ற ஒன்றையேதான் திருப்பத் திரும்ப அவர் சொல்லிக் கொண்டிருந்திருக்கின்றார். காலப்போக்கில் இந்திய இராணுவம்மூத்தண்ணைக்குமூளை பிசகிவிட்டதென அவரை அவர் போக்கில் இரவில் ஊருக்குள் வந்தாலும் அடி உதை கொடுக்காது விட்டுவிடுவார்கள்.

அம்மாதான், 'மூத்தண்ணை இப்போது ஆர்மிக்காரன் ஊரடங்குச் சட்டமெல்லாம் போட்டிருக்கின்றான். கண்டபாட்டுக்கு இரவுகளில் திரியாதையுங்கள்' எனச் சொல்வார். மூத்தண்ணையோ, 'இந்த வாழ்க்கையோ அவனிட்ட பிச்சை, வேண்டியபோது அவனே எடுத்துக் கொள்ளட்டும்' என வானத்தை நோக்கி கைகளை விரித்துக் காட்டுவார். இவ்வாறான நேரங்களில் இவர் இயக்கத்தின் ஆளல்ல, வைரவர் அனுப்பி வைத்த இரகசிய உளவாளியோ என நான் சந்தேகப்படுவதுண்டு. பிறகு மூத்தண்ணை தனது வழமையான ஹா ஹா என்ற உடலதிரும் சிரிப்போடு மூட்டைகளைச் சுமந்துகொண்டு நள்ளிரவுகளிலோ அல்லது விடிகாலையிலோ எங்கேனும் கண்காணாத இடத்துக்குப் புறப்பட்டுப் போய்விடுவார்.

எமது பள்ளிக்கூடம் எல்லாம் மூடப்பட்டு, முக்கிய தெருவுக்குப் போய் சும்மா எட்டிப் பார்த்தாலே ஆர்மி ஒளிந்திருந்து சினைப்பர் அடித்துவிடுவான் என்று வீடுகளுக்குள் முடங்கிக்கிடந்த காலத்தில், 'எப்படியம்மா மூத்தண்ணை மட்டும் எங்கெங்கோ எல்லாம் சுதந்திரமாக அலைந்து திரிகிறார்' என அம்மாவிடம் கேட்டிருக்கின்றேன். 'நாங்கள் சாதாரண மனுசர்கள். மூத்தண்ணை பைத்தியம் என்னும் வேடம் போட்டபடி அலையும் ஒரு சித்தர்' என்றார் அம்மா. எனக்கு அந்த வயதில் சித்தர் என்பதற்குச் சரியான அர்த்தம் தெரிந்திருக்கவில்லை. பக்கத்து வீட்டு சிற்றம்பலத்தாரை சித்தர் எனச் சுருக்கி அழைப்பதைக் கேட்டதைத் தவிர சித்தர் என்பதற்குப் பெரிதாகப் பொருள் விளங்கியதில்லை. ஆனால், அம்மா சொல்வதைப் பார்த்தால், வைரவரின் இரகசிய உளவாளி மூத்தண்ணை என நான் நினைத்துக் கொண்டது சரிதான் போலிருக்கின்றதென எண்ணிக் கொண்டேன்.

அத்தோடு எங்கள் ஊரில் தாயும் பெண்ணும் தனித்திருந்த வீட்டில் முன்பு கள்வன் வந்து நகை திருடியபோது, அவனை அடித்து உதைத்து கோவணத்தோடு துரத்தியது வைரவர் அல்ல, வைரவருக்காய் இரவுகளில் உளவு பார்த்து, ஊரைக் காத்துக் கொண்டிருந்த இந்த மூத்தண்ணைதான் என்பதும் எனக்குள் உறுதியானது. மூத்தண்ணையும், பக்கத்து வீட்டுச் சித்தரைப்போல சாராயம் அதிகம் குடித்து விரைவில் இறந்து போய்விடக்கூடாது என்று மட்டும் அப்போது நினைத்துக்கொண்டேன். ஆனால், அப்படி ஏதும் மூத்தண்ணைக்கு நிகழவில்லை. அதைவிட அவலமான முடிவை வைரவரின் சீடர் பின்னாட்களில் சந்திக்க வேண்டியிருந்தது.

அந்நிகழ்வு நடந்தபோது வைரவர் கோயிலின் சூலம் கருவறைக்குள் இருந்து காணாமற் போயிருந்தது. அன்று தனது இரகசிய உளவாளியுடன் கோயில் விட்டு நீங்கிய வைரவரும் பின் எப்போதும் நம் ஊருக்குள் திரும்பாமலே மறைந்தும் போனார்.

*3.*

ஒருநாள் மூத்தண்ணை வழக்கம்போல பற்றையம்மன் கோயிலுக்குள் அடைக்கலம் புகுந்திருந்தார். அப்போது இரவு ஏழு மணியாக இருக்கும். இருள், ஆனால், அடர்த்தியான இருண்மையில்லை. சூரியன் எப்போதோ மறைந்துவிட்டிருந்தது. அந்த நேரத்தில் இந்தியன் இராணுவ முகாமிலிருந்து அலறல் சத்தம் மூத்தண்ணைக்குக் கேட்டிருக்கின்றது.

இவ்வாறான அலறல்கள் கேட்கும் சமயங்களில் நாங்கள் ஒன்றை மட்டுமே செய்வோம். எங்கள் காதுகளைப் பொத்தியபடி இன்னும் எங்களுக்கான காலம் முகாம்களில் கழிக்க வரவில்லை என நினைத்துக்கொள்வோம். அதைவிட வேறு வழிகள் ஏதும் அப்போது சிறுவர்களாகிய எங்களுக்கு இருக்கவில்லை. அன்று எங்களுக்கு எந்த அலறலும் கேட்கவில்லை. கேட்டிருந்தால் கூட காதை மூடியபடி அமைதியாகத்தான் வழமை போல இருந்திருப்போம். ஆனால், ஆர்மிக்காம்பிற்குப் பக்கத்திலிருக்கும் பற்றையம்மன் கோயிலில் இருந்த மூத்தண்ணைக்கு இந்த அலறல் சத்தம் நன்கு கேட்டிருக்கின்றது.

அவர் ஆர்மிக்காம்பை நோக்கி ஓடியிருக்கின்றார். இந்தியன் ஆர்மிக்காரன் தமது முகாமைச் சுற்றி முள்வேலி சுற்றியிருந்தாலும், பின் வளவுக்குள்ளால் ஒரு ஒற்றையடிப் பாதையை அம்மன் கோயிலுக்குச் செல்வதற்கென விட்டிருந்தனர். தாம் செய்யும் பாவங்களுக்கு பிரயச்சித்தம் கேட்க வேண்டி கோயிலுக்குப் போவதற்காகவோ அல்லது அப்படிப் பாதையை மூடினால் அம்மன் கோபித்து தீங்கு செய்துவிடுவார் என்பதாலோ இப்படியொரு குறுக்குவழி இருந்தது. அதை ஆர்மியைத் தவிர வேறு எவரும் பாவிப்பதில்லை.

அந்த ஒற்றையடிப்பாதையினால் மூத்தண்ணை போயிருக்கின்றார். இந்தியன் ஆர்மி ஏற்கனவே இருந்த பல வீடுகளை இணைத்துத்தான் முகாங்களை பொதுவாக உருவாக்கும் என்பதால், அவர் இன்னொருவீடொன்றின் யன்னலுக்குள்ளால் எட்டிப் பார்த்தபோது அங்கே என்ன நடக்கின்றதென்று ஓரளவுக்குத் தெரிந்திருக்கின்றது. பக்கத்து ஊரைச்

சேர்ந்த ஒரு பெண்ணை, தலைமறைவாகத் திரிந்த இயக்கத்துக்கு உதவுகின்றார் என்ற சந்தேகத்தில் ஆமிக்காரர் கொண்டுவந்து சித்திரவதை செய்திருக்கின்றனர். பெண்கள் மீது இந்தியன் ஆர்மி செய்யும் சித்திரவதை என்ன மாதிரியென எவருக்குமே விளங்கப்படுத்தத் தேவையில்லை.

இருட்டுக்குள் நின்று கதறலைக் கேட்ட மூத்தண்ணைக்கு, பற்றையம்மன் கோயிலில் உருவாடும் தவத்தார் போல வெறியேறிய உரு வந்திருக்கவேண்டும். அம்மனே அந்தப் பிள்ளையைக் கைவிட்டபின் அவர் அம்மனிடம் நீதி கேட்கப் போகவில்லை. நேரே வைரவர் கோயிலுக்குப் போய் சூலாயுதத்தை பிடுங்கி எடுத்துக் கொண்டு ஓடியிருக்கின்றார். 'என்னடா அந்தப் பிள்ளைக்குச் செய்கிறியள்?' என்று உறுமியபடி முகாமிற்குள் நுழைந்த மூத்தண்ணைக்குள் அப்போது வைரவர் முழுதாய் இறங்கி விட்டிருக்க வேண்டும்.

பெண் பிள்ளையைக் கூட்டாய்ச் சித்திரவதை செய்து கொண்டிருந்த ஒரு ஆர்மிக்கு அவர் சூலாயுதத்தால் குத்தியிருக்கின்றார். அடுத்த குத்தைப் பாய்ச்சுவதற்கு முன்னர் மற்ற ஆமிக்காரர்கள் மூத்தண்ணைக்குப் பின்பக்கமாய் வந்து கைகளை முறுக்கி கால்களை மடக்கி அவரை நிலத்தோடு விழுத்திவிட்டார்கள். இம்முறை மூத்தண்ணையின் விசித்திரக்குணம் அவருக்கு அனுகூலமாக அமையவில்லை. ஆர்மிக்காரர்கள் சும்மா பயந்தோட நமது ஊர் அப்பாவிக் கள்வர்களுமல்ல. அவர்கள் கண்மண் தெரியாது மிதி மிதியென்று மிதித்திருக்கின்றார்கள். அவரை மிதித்ததைவிட அந்தப் பெண்ணை இன்னும் என்னவோ எல்லாம் மூத்தண்ணையின் கண்முன்னாலே செய்திருக்கின்றார்கள். அன்றோடு அந்தப் பெண் உயிரோடோ அல்லது உயிரில்லாமலோ என்றென்றைக்குமாய்க் காணாமற்போனார்.

இரவு முடியும்வரைக்கும் மூத்தண்ணையை உயிரோடுவிட்டுவைத்திருந்தார்கள். ஆனால், அவரின் உடல் சிதைந்துபோயிருந்தது. மூத்தண்ணையை அடுத்து என்ன செய்வது என்றயோசனையில் இருந்த ஆர்மிக்காரர்கள், விடிகாலையில் மூத்தண்ணை எங்கிருந்தோ வருகின்றபோது இயக்கம் என்ற சந்தேகத்தில் இருட்டில் வைத்து தவறுதலாகச் சுட்டுவிட்டோம்என்றுசொல்லி, வெள்ளவாய்க்காலில் குற்றுயிரும் குலையுயிருமாய்ப் போட்டிருக்கின்றனர்.

காலையில் வைத்தியசாலை பணிக்காய்ப் போன ஒரு வைத்தியர்தான் மூத்தண்ணையை அந்தக் கோலத்தில் கண்டிருக்கின்றார். மூத்தண்ணைக்கு உதவப்போனால் ஆர்மிக்காரர் ஏதாவது செய்துவிடுவார்களோ என்று அந்த வைத்தியரை மற்றவர்கள் தடுக்கத் தடுக்க, அவர் 'நானொரு வைத்தியன், பிறரின் உயிர் போவதைத் தடுப்பதே என் தொழில்' என வெள்ளவாய்க்காலுக்குள் இறங்கி மூத்தண்ணையை எடுத்து வைத்தியசாலைக்குக் கொண்டு சென்றிருக்கின்றார். தனக்கும் அந்தப் பெண்ணுக்கும் என்ன நடந்ததென்பதை விசித்திரமான மொழியில் திக்கித்திணறிச் சொல்லிய மூத்தண்ணையை இறுதியில் அந்த வைத்தியராலும் காப்பாற்றமுடியாது போனது.

சோக்கிரட்டீஸை நஞ்சூட்டிக் கொன்றனர். கலிலியோ கலிலியை கழுமரத்தில் ஏற்றினார்கள். யேசுவை சிலுவையில் அறைந்தனர். 'யாரடா நீ, உனக்குள்ளே உன்னைத் தேடடா' என யோகர் சுவாமியால் அருட்டப்பட்டு எவருக்குமே தீங்கிழைக்காது தன்பாட்டில் ஊர் ஊராய்த் திரிந்து கொண்டிருந்த மூத்தண்ணையின் கதையை இறுதியில் வெள்ளவாய்க்காலுக்குள் இந்திய இராணுவம் முடித்து வைத்தது.

மூத்தண்ணை தூக்கிக் கொண்டு போன சூலாயுதமும் அத்தோடு காணாமற் போனது. சூலாயுதம் இல்லாத வைரவர் கோயில் கொஞ்சம் கொஞ்சமாகப் பூசைகள் எதுவுமற்றுப் பாழடையத் தொடங்கியது. வைரவரும் மூத்தண்ணையும் இல்லாத எமது ஊரைத் துர்தேவதைகள் சபிக்கத் தொடங்கின. இழப்புக்களும் துயரங்களும் எம்மைச் சூழ்ந்து தப்பும் வழிகள் எதுவும் தெரியாது நாங்கள் தவிக்கத் தொடங்கினோம்.

வைரவரைப் போல ஊரைக் காவல் காத்துக்கொண்டு, இரவுகளில் அலைந்த மூத்தண்ணை இல்லாது, இந்த ஊரில் இனி உயிர்ப்பிருக்கப் போவதில்லையென தவத்தார் ஒருநாள் சொன்னார். அப்படிச் சொன்ன தவத்தாரும் மத்தியான வெயில் பொழுதுகளில் வேப்பமரங்களின் உச்சியில் யாரோ நிற்பது போல தன்னோடு தானே பேசத் தொடங்கினார். இந்தச் சனியன் பிடித்த யுத்தத்தில் ஒன்று மனுசர் சாகவேண்டும் இல்லாவிட்டால் பைத்தியம் பிடித்து அலையவேண்டும் என்று அம்மா ஒருநாள் வெப்பியாரத்தில் திட்டினார்.

அன்றிரவு எனக்கு ஒரு விசித்திரமான கனவு வந்தது. இந்திய இராணுவத்தால் சித்திரவதை செய்யப்பட்ட பெண் கொல்லப்படடு மரவள்ளித் தோட்டம் ஒன்றுக்குள் கொண்டு செல்லப்படுவதையும் அவரோடு சேர்த்து வைரவரின் சூலாயுதமும் புதைக்கப்படுவதையும் கண்டேன். நிறைவாழ்வு வாழாது இளவயதில் அநியாயமாகக் கொல்லப்படுகின்ற பெண்களே நம் மரபில் சிறுதெய்வமாகின்றனர். அப்படியெனில் அந்த அக்காவுக்காகவும் ஒரு கோயில் என்றோ ஒருநாள் எங்கள் ஊருக்குள் சூலாயுதத்துடன் எழத்தான் செய்யும் என நான் ஆறுதலடைந்து கொண்டேன்.

இவையெல்லாம் நடந்து சில மாதங்களுக்குப் பிறகு ஒரு மாலை வேளை, எனக்கு என்ன நடக்கின்றதென்று அறியாது என்னை ஒரு விசை




உந்தித்தள்ள எங்களுக்குப் பங்கு இருந்த கிணற்றடியை நோக்கிச் சென்றேன். அங்கேதான் நீச்சல் தெரிந்த எனது அம்மப்பா தனது கால்களை கயிறுகளால் இறுக்கக் கட்டிவிட்டு, உள்ளே குதித்துத் தற்கொலை செய்திருந்தார். இந்தப் போரில் நீ சாகவோ அல்லது பைத்தியக்காரனாகவோ தேவையில்லை, உனக்கு மூன்றாவதாகவும் ஒரு தெரிவு இருக்கின்றது, இந்த கிணற்றுக்குள் வந்து உள்ளே குதியென்று என்னை ஒரு குரல் அழைத்தது. நீரில் மிதந்து வந்த அந்த விம்பம் எனது அம்மப்பா போல இருந்தது. நான் கிணற்றுக்குள் குதிக்கத் தயாரானபோது சட்டென்று நீர் கலங்க, 'இப்போது எங்களிடம் வரும் நேரமில்லை'யென மூத்தண்ணையின் உருவம் தோன்றிச் சொல்லியது. மூத்தண்ணை என்னை இரண்டாவது தடவையாகக் காப்பாற்றினார்.

அப்போது, எங்கே என்னைக் காணவில்லையென தேடி வந்த அம்மாவின் கரம் என்னை கிணற்றுக்கட்டில் இருந்து இழுத்து அணைத்துக் கொண்டது. 'அம்மப்பாவைத் தண்ணீருக்குள் பார்த்தேன், என்னைத் தன்னிடம் வாவென்று அழைத்தார்' என நான் அம்மாவுக்குச் சொன்னேன். அம்மா 'ஐயோ' என்று கத்தி அழத் தொடங்கினார்.

இளங்கோ <elanko@rogers.com>

# ஒவ்வொரு நபருக்கும் பொறுப்பு இருக்கிறது

**கிறிஸ்டியன் மூஞ்சியூ**

**தமிழில்: ராம் முரளி**

ருமேனியாவின் புதிய அலை இயக்குநர்களில் ஒருவர், கிறிஸ்டியன் மூஞ்சியூ (Cristian Mungiu). ருமேனியச் சமூகத்தின் ஆதிக்க அமைப்புகள் குறித்த திரைப்படங்களைத் தொடர்ச்சியாக உருவாக்கி வருகிறார். சகிக்கவியலாத உண்மைகளையும் அறப் பிழற்வுகளையும் இவரது படங்கள் பேசுபொருளாகக் கொண்டிருக்கின்றன.

கேன்ஸ் விருது பெற்ற '4 Months, 3 Weeks and 2 Days' என்கிற திரைப்படத்தின் மூலம் உலகளவில் கவனிக்கத்தக்க இயக்குநராக உருவெடுத்தார், கிறிஸ்டியன் மூஞ்சியூ. இத்திரைப்படத்தின் கதை, ருமேனியாவில் நிக்கோலே சியோசெஸ்குவின் ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்த 1987ஆம் ஆண்டில் நடைபெறுகிறது. மக்கள் தொகையை அதிகப்படுத்த வேண்டும் என்ற ஒரே காரணத்திற்காக மட்டும் கருக்கலைப்பை அவரது ஆட்சி தடை செய்திருந்தது. இதன் விளைவுகளால் பாதிப்பிற்குள்ளாகும் இரு பெண்கள் குறித்த சித்தரிப்பே இத்திரைப்படம்.

அதன்பிறகு இவர் இயக்கிய 'Beyond the Hills', 'Graduation' போன்ற திரைப்படங்களும் நம்பிக்கை, மத உணர்வு, பிறர் உயிர்களின் மீதான அலட்சியப் பாங்கு போன்றவற்றைப் பிரதிபலிப்பதாக இருந்தன.

இவற்றின் தொடர்ச்சியாக, 2022இல் கிறிஸ்டியன் மூஞ்சியூ இயக்கிய திரைப்படம் 'R.M.N.' இத்திரைப்படத்தின் கதை ருமேனியாவின் சிறிய கிராமமொன்றில் நடைபெறுகிறது. ஒரு குளிர் காலத்தில் கிறிஸ்துமஸ் பண்டிகையை ஒட்டிய நாட்களில் இக்கதை அமையப் பெற்றிருக்கிறது. தொலை தேசங்களுக்குப் பொருளீட்டுவதற்காகச் சென்றிருந்தவர்கள் மீண்டும் தமது தாய் நிலத்திற்குத் திரும்புவதும், அங்கு உலகின் வெவ்வேறு பகுதிகளில் இருந்து குடியேறி இருப்பவர்களைச் சகித்துக்கொள்ளவியலாத இரண்டாம்தரக் குடிமக்களாகப் பார்ப்பதுமான ஒரு முரண் இக்கதையின் மையமாக இருக்கிறது. குறிப்பாக, ஒரு நெருக்கடி நிலை உருவாகும்போது, மக்கள் எப்படிப் பாரபட்சமாக நடந்துகொள்கிறார்கள் என்பதும், அச்சூழலில் தாம் நம்பும் இறையியலுக்கே எதிராகத் திரும்பவும் அவர்கள் தயங்குவதில்லை என்பதும் இதில் அழுத்தமாக அலசப்பட்டிருக்கிறது. பொது அறை ஒன்றில் ஒரே ஷாட்டில் 15 நிமிடங்களுக்குப் படமாக்கப்பட்டிருக்கும் காட்சி ஒன்று இத்திரைப்படத்தில் வருகிறது. அதில் சிறுபான்மையினர், புலம்பெயர் தொழிலாளர்கள், அகதிகள் போன்றோர் குறித்து பல்வேறு எதிர்மறையான கருத்துகள் பகிரப்படுகின்றன. அம்மக்கள் ருமேனியாவில் இருந்து வெளியேற வேண்டுமெனக் குரலெழுப்படுகிறது. அங்கு மனிதம் நீங்கிய நிலையொன்று உருதிரள்கிறது. இக்காட்சியை மிகத் தீவிரமாகவும் தனது நிலையைத் தற்காத்துக்கொள்ள மனித மனம் எப்படியெல்லாம் 'பிறர்' எனும் கருத்தாக்கத்தை உயர்த்தி அதற்கு எதிர்மறை சாயத்தைப் பூசுகிறது என்பதை வெளிப்படுத்தும் வகையிலும் கிறிஸ்டியன் மூஞ்சியூ உருவாக்கியிருக்கிறார். வெளிப்படையான சில புரிதல்களுக்கு அப்பால் பல பூடகமான காட்சியமைப்புகளும் இத்திரைப்படத்தில் உள்ளன. பார்வையாளர்கள் அவரவர் எண்ணப்படி அக்காட்சிகளில் உள்ள இடைவெளிகளைக் குறுக்கீடு செய்வது அர்த்தப்படுத்திக்கொள்ளலாம்.



கேன்ஸ் விழாவில் திரையிடப்பட்ட 'R.M.N.' குறித்து கிறிஸ்டியன் மூஞ்சியூ உடன் எலிசா சஹ் மேற்கொண்ட நேர்காணலின் தமிழாக்கமே இங்கே வழங்கப்பட்டுள்ளது.

***



'R.M.N.' திரைப்படம் கிறிஸ்துமஸ் பண்டிகையையும் தொற்றுநோயையும் குறித்ததாக இருக்கப் போகிறது என்பதை தொடக்கத்தில் நான் உணர்ந்திருக்கவில்லை. அதாவது,தொற்றுநோய்பரவல்தொடங்கியவுடன் மக்களிடம் என்னவிதமான இயல்பு மாற்றங்கள் ஏற்படும் என்பதை இத்திரைப்படம் முன்னறிவிப்பதைப்போல உள்ளது.

இதுவொரு புனைவுதான் என்றாலும், ருமானியாவில் நிகழ்ந்த உண்மைச் சம்பவத்தை அடிப்படையாகக் கொண்டது. கதையில் நிகழும் தருணங்களுக்குள் ஓர் ஒத்திசைவைத் தோற்றுவிக்க, அந்தச் சம்பவத்தில் சிற்சில மாற்றங்களைச் செய்து கையாண்டிருக்கிறேன். எனக்கு முக்கியமானதாகத் தோன்றிய இரு விஷயங்களை மட்டும் உண்மைச் சம்பவத்தில் இருந்து தக்கவைத்துக்கொண்டேன்: ஒன்று இத்திரைப்படத்தின் முதன்மைக் கதாபாத்திரம் கிறிஸ்துமஸ் பண்டிகையைத் தன் ஊரில் கொண்டாடுவதற்காக ஜெர்மனியில் இருந்து வந்திருக்கிறான். மற்றொன்று, இந்தக் கதை நோய்தொற்றுக்கு முன்பாக நடப்பது. படப்பிடிப்பின்போது,படத்தின் இறுதிக்காட்சிகளில் சில துணைக் கதாபாத்திரங்கள் முககவசம் அணிந்திருப்பதைப்போலக் காட்டலாம் என்றொரு எண்ணம் எனக்கு உருவாகியது. ஆனால், அது திரைப்படத்தின் காலகட்டத்தை வரையறுப்பதில் ஒருவிதத் துல்லியத்தன்மையை வழங்கிவிடும் என்பதால் அந்த யோசனையைத் தவிர்த்துவிட்டேன். அதைச் சற்றே நெகிழ்வுடனும் உலகமயமாக்கலின் விளைவுகள் அதில் பிரதிபலிக்கும் வகையிலும் கையாள்வது எனக்கு முக்கியமானதாக இருந்தது.

கிறிஸ்துமஸ் பண்டிகையை ஒருவிதமான தலைக்கீழ் இடப்பெயர்வு என்று சொல்லலாம். அப்போது உலகெங்கிலும் பல்வேறு இடங்களில் பணியாற்றும் மக்கள் மீண்டும் தமது தாய் நிலத்திற்குத் திரும்புகிறார்கள். நேர்மையாகச் சொல்ல வேண்டுமானால், மக்கள் வேலைக்காகப் பிறநாடுகளுக்குச் செல்வதால் நம் நாடு வெறிச்சோடிக் கிடக்கிறது. மேற்குலகிற்கு வேலைத்தேடி பயணப்படும் அவர்கள் மீண்டும் கிழக்கில் இருக்கும் சொந்த நாட்டிற்குத் திரும்புகிறார்கள். எவ்வளவு கிழக்காக அவர்கள் வருகிறார்களோ, அந்தளவிற்கு (படத்தில் காட்டப்படுவதைப்போல) அவர்களின் நடத்தையும் வேறுபட்டிருக்கிறது. அது ஏன் அப்படி இருக்கிறது என்பதை நான் ஆராய விரும்பினேன்.

நாம் ஏன் நியாயமாக நடந்துகொள்வதில்லை? நம்மைப் பிறர் எப்படி நடத்த வேண்டும், அணுக வேண்டும் எனக் கருதுகிறோமோ அதேவிதமான அபிப்ராயங்களையும் மரியாதையையும் நாம் ஏன் பிறருக்குக் கொடுப்பதில்லை? இது மனித இயல்பின் ஓர் அங்கம் என்பதே இதற்கான பதிலாக இருக்கும் என்று கருதுகிறேன்.

படத்தின் முதன்மைக் கதாபாத்திரங்களில் ஒருவனான மத்தியாஸும் இக்கேள்விக்குப் பதிலளிக்கிறான். பிறர் மீது யார் பரிவு கொள்கிறார்களோ அவர்கள்தான் முதலில் கொல்லப்படுகிறார்கள் என்று தன் மகனிடம் அவன் சொல்கிறான். இவை யாவும் தன்னைத் தற்காத்துக்கொள்வதுடன் தொடர்புடையது.

இந்தக் கருத்தை என்னைச் சுற்றியிருக்கும்

பலரிடமிருந்தும் அவ்வப்போது கேட்கிறேன். ஒரு காலத்தில் எதிர்காலம் எனும் கருத்தை நாம் மிக அப்பால் வைத்து அணுகியதைப்போல, இன்றைய பெற்றோர் கருதுவதில்லை. உலகத்தின் எதிர்காலம் குறித்து பீதியுறும் போக்கு இன்றைய பெற்றோரிடம் அதிகளவில் இருக்கிறது. 'MadMax'[1979] திரைப்படத்தில் வருவதைப்போல நீருக்காகவும் பிறவளங்களுக்காகவும் மக்கள் தமக்குள் சண்டையிட்டுக்கொள்ளும் சூழல் அண்மித்துவிட்டதாகக் கருதும் நிலை இன்றிருக்கிறது. இந்தப் பெரும்சிதைவு தமது பிள்ளைகளின் காலகட்டத்திலேயே நிகழப்போகிறது எனும் கற்பனையில் உழலும் பல பெற்றோரை நம்மால் பார்க்கமுடிகிறது. இதுதொடர்பான உரையாடல்கள் அவர்களை அவஸ்தைக்கு உள்ளாக்குகின்றன. என்னவிதமான எதிர்காலத்திற்குத் தமது பிள்ளையைத் தயார்படுத்துவது என்கிற நினைப்பு அவர்களைப் பெரும் கவலையில் ஆழ்த்துகிறது.

இத்திரைப்படத்தில் வருகிற மத்தியாஸைப் பொருத்தவரை, அவனுடைய நோக்கம் சரியானதாகவே இருந்தாலும், தன் பிள்ளை எந்தளவிற்குக் கவலையில் ஆழ்ந்திருக்கிறானோ அதைவிடவும் அதிகப்படியாக அந்தப் பிள்ளை குறித்து தான் கவலையில் ஆழ்ந்திருப்பதாக அவன் காட்டிக்கொள்கிறான். அதோடு கிறிஸ்துமஸ் பண்டிகை குறித்த மிக அற்புதமான காட்சி ஒன்றை நான் படமாக்கினேன். ஆனால், துரதிர்ஷ்டவசமாக, படத்தில் அக்காட்சி இடம்பெறவில்லை. ஏனெனில், இந்தச் சிறிய கிராமத்தில் நிகழும் அனைத்தும் உண்மையில் கிறிஸ்துமஸ் உங்களுக்கு என்ன போதிக்குமோ அதற்கு நேரெதிராக இருப்பதாக எனக்குத் தோன்றியது. நீங்கள் கிறிஸ்தவரோ இல்லையோ, ஆனால், ஒரு கிறிஸ்துமஸ் தினத்தன்று நீங்கள் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும். அதன் ஒட்டுமொத்தச் சூழலும் உங்களை மேன்மையானவராகவும் கூடுதல் கருணை உணர்வுடன் இருக்கும்படியும் பிறரை நேசிக்கும்படியும் உங்களை ஊக்குவிக்கிறது. மேலும், இத்திரைப்படத்தில் நிகழும் சம்பவங்கள் கிறிஸ்துமஸுக்கு மிக நெருக்கத்தில் நிகழ்கின்றன. ஆனால், திடீரென மக்கள் அனைவரும் தாங்கள் முடிவு எடுக்க வேண்டிய மிக முக்கியமான ஒரு விஷயம் இருக்கிறதென்றும், அந்த நேரத்தில் கொண்டாட்டத்திற்குரியதாக இருக்கும் 'கிறுஸ்துவர்' எனும் நிலை தொடர்பாகத் தங்களிடம் எதுவும் இல்லையென்றும் கருதுகின்றனர்.

கிறிஸ்துமஸ் தினத்தில் ஒரு காட்சி வருகிறது. அதில் ஃபிரெஞ்ச் நாட்டைச் சேர்ந்தவருக்கு ஒருவர் திரான்சில்வேனியாவின் சூழல் குறித்து விளக்குகிறார். ஓட்டோமான்கள், ஹங்கேரியர்கள், மங்கோலியர்கள் போன்ற 'பேரரசுகளால் நசுக்கப்பட்டவர்கள்' என்று அவர் சொல்கிறார். இப்படியொரு மேற்கோள் வருகிறது: 'சகோதரனே, சகோதரனே, நீ எனக்கு எவ்வளவு நெருக்கமானவனாகவும் இருந்துவிட்டு போ! ஆனால், என்னிடம் இருந்து பெறும் பாலாடைக் கட்டிக்கு நீ நிச்சயம் பணம் கொடுக்க வேண்டும்'. இதை நான் எப்படிப் புரிந்துகொள்கிறேன் என்றால் வணிகம், பணம், பரிவர்த்தனைகள் யாவும் முக்கியமானவை, நட்பிற்கு அப்பாற்பட்டவை. எனது இந்தப் புரிதல் சரியானதுதானா?

துரதிருஷ்டவசமாக, இதுபோன்ற பல ருமேனிய மேற்கோள்கள் எங்களிடம் உள்ளன. தம்மைத் தற்காத்துக்கொள்ள வேண்டிய நிலையில் இருந்த கடந்தகால மக்களின் ஞானத்துடன் இவை தொடர்புடையவையாக இருக்கின்றன. நாம் நண்பர்களாக இருக்கலாம், ஏன் குடும்பத்தினராகக்கூட இருக்கலாம், ஆனால், வணிகம் என்று வருகின்றபோது அங்கு வேறு விதிகள் செயலாற்றுகின்றன. நீ எனக்கு நெருக்கமாக இருப்பதாலேயே நான் உனக்கு சலுகைக் காட்ட வேண்டுமென்கிற அவசியமில்லை. இன்றைய காலத்தில், உங்கள் குழந்தைகளுக்குச் சொல்ல வேண்டிய வார்த்தைகள் இல்லை இவை. இதை உங்களால் புரிந்துகொள்ள முடியுமென்று நினைக்கிறேன். மேலும் இங்கு வாழும் மக்கள் கடைப்பிடிக்க வேண்டிய அல்லது கடக்க வேண்டிய ஒருவிதமான கடுமையைப் பற்றி இவை கூடுதலாகத் தெரிவிக்கின்றன. 'தலை நிமிராமல் நடப்பவனின் தலை வெட்டப்படுவதில்லை' என்றும் நாம் சொல்லிக்கொண்டிருக்கிறோம். இது ஏற்கத்தக்க கருத்தல்ல. பொதுவாக, நாம் நமது பிள்ளைகளுக்கு எப்படிப் போராடுவது என்றே கற்றுத் தருவோம். ஆனால், இது அதற்கு நேரெதிரானதாக இருக்கிறது.

அரசியல்ரீதியாகச் செயலற்றத்தன்மையில் இருக்கும் மத்தியாஸை இச்சொற்றொடர் கிட்டத்தட்ட கச்சிதமாகவே விளக்குகிறது. அவன் எல்லா இடங்களிலும் வரவேற்கப்படுகிறான், வெவ்வேறு விதமான மனிதர்களுடன் அவனால் பழக முடிகிறது. ஆனால், அந்த நகரத்தில் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதை விடவும் தனது தனிப்பட்ட வாழ்க்கை குறித்தும் தனது முன்னாள் காதலியுடனான உறவு குறித்தும் மட்டுமே அவன் அக்கறையுடன் இருக்கிறான்.

எனது திரைப்படத்திலும் நமது சமூகத்திலும் தமக்கென எந்தவொரு நிலைபாடும் இல்லையெனில் தமக்கு பொறுப்பென்று எதுவும் இல்லை என நம்பும் பலர் இருக்கிறார்கள் என்பது எனக்கு சுவாரஸ்யமளிக்கிறது. படத்தின் முடிவில் மத்தியாஸ் என்ன கற்றுக்கொள்கிறான் என்றால், ஒருவேளை அவன் ஏதேனும் கற்றுக்கொள்கிறான் எனில், ஒவ்வொரு நபருக்கும் பொறுப்பு இருக்கிறது. நீங்கள் எதுவொன்றிலும் கலந்துகொள்ளவில்லை என்றாலும்கூட விளைவுகளுக்கு நீங்கள் பொறுப்பாளியாகக் கருதப்படுவீர்கள். உலகில் அப்படித்தான் இப்போது நடந்துகொண்டிருக்கிறது. அதோடு, மத்தியாஸ் மையநீரோட்டத் திரைப்படக்


4 Months, 3 Weeks and 2 Days

கதாபாத்திரத்திற்கு எதிரானது என்பதையும் சொல்ல விரும்புகிறேன். அவன் பெரியளவில் மேம்படுவதில்லை - அப்படித்தான் அந்தக் கதாபாத்திரத்தைப் படைக்கவிரும்பினேன். இன்றைய கால உலகில் என்ன நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்பது குறித்த குழப்பத்தில் இருக்கும் நபர்களை அவன் பிரதிநிதித்துவப்படுத்துகிறான். நடப்பவை குறித்து அவர்களுக்கு எந்தவொரு தெளிவுமில்லை. இந்த உலகமயமாக்கப்பட்ட சமூகத்தில் நிகழும் மாற்றங்களையும் அவர்கள் புரிந்துகொள்வதில்லை. தங்களுக்கு என்ன தெரியுமோ அதைத் தக்கவைத்துக்கொள்ள முயல்வதுமட்டுமே அவர்களின் ஒரே இலக்காக உள்ளது: பாரம்பரியங்கள், அது எப்படி இருந்ததென்கிற கருத்தோட்டம், கணவனின் கடமை அல்லது ஒரு பெண்ணின் கடமை.

சில்லாதான் மத்தியாஸின் காதலியாகவும் அவனுடைய அதீத மனப்பீடிப்பாகவும் இருக்கிறாள். அவளுக்கென அறப் பண்புகளும் அச்சுறுத்தலுக்கு உள்ளாக்கப்படும் புலம்பெயர் தொழிலாளர்களுக்கு உதவ வேண்டும் என்கிற மாண்பும் இருக்கிறது. அதோடு, கிறிஸ்துமஸ் பண்டிகையைத் தனிமையில் அமர்ந்து திரைப்படங்களைப்பார்த்துக்கொண்டும்செலோ இசைக் கருவியில் ‘In the Mood for Love’ திரைப்பட இசையை இசைத்துக்கொண்டும் போக்குகின்ற தன்மையும் அவளிடம் இருக்கிறது.

ஒவ்வொரு கதாபாத்திரத்திற்கும் அவர்களுடைய கடந்தகால வரலாற்றையும் சேர்த்து எழுதும் வழக்கம் எனக்கு இருப்பதால், அதில் நடிக்கின்ற நடிகர்களும் அவ்வரலாற்றை அறிந்திருக்கிறார்கள். சில்லாவுக்கும் மத்தியாஸுக்கும் இடையில் இருக்கின்ற விநோதமான உறவு அவர்களுடைய பால்ய காலத்தின் அடிப்படையிலானது. அவர்கள் இருவரும் உயர்நிலைப் பள்ளியில் ஒன்றாகப் படித்தவர்கள். அதனால் தங்களது கடந்தகாலம் தொடர்பாக இருவருக்கும் ஏக்கவுணர்வு இருக்கிறது. வெவ்வேறு சமூக நிலையை அடைந்திருக்கும் அவர்கள், இன்றைக்கு அவர்கள் என்னவாக இருக்கிறார்களோ அதைக் கருத்தில்கொள்வதில்லை. சில்லா வெளிப்படையாகவே செயற்பாட்டாளராகவும் சமூகத்தின் முற்போக்கு குழுமத்தைப் பிரதிபலிப்பவராகவும்இருக்கிறார். உலகமயமாக்கலின் விளைவாக, இதுபோன்றவர்கள் அனைவரும் ஒரேவகையிலான பார்வைகளைத்தான் கொண்டிருக்கிறார்கள்: சைவ உணவு உண்பவர்கள், அவ்வப்போது தங்களைப் புதுப்பித்துக்கொள்பவர்கள், IKEAயில் இருந்துபொருட்களை வாங்குபவர்கள், ஒரே தளத்தைத் தொடர்ந்து பார்த்துக் கொண்டிருப்பவர்கள். இவை யாவும் இணையதளத்தால்தான் சாத்தியமாகின்றன. இதற்கு அப்படியே நேரெதிராக, மத்தியாஸ் உலகமயமாக்கலை வெறுப்புடனும் அச்சத்துடனும் உலகின் மகத்தான முடிவு குறித்த போலிச் செய்திகளால் நிரம்பியவனாகவும் இருக்கிறான். ஆனாலும் அவர்கள் இருவரும் தமக்கிடையில் அன்பைப் பகிர்ந்துகொள்கிறார்கள். நான் அதைக் காதல் என்றுகூட சொல்ல மாட்டேன். யாரேனும் ஒருவருடன் மிக நெருக்கமான உணர்வைப் பகிர்ந்துகொள்ளவும் அவர்களின் கரத்தை இறுகப் பற்றிக்கொள்ளவும் அவர்கள் விழைகிறார்கள். அதேப்போல, சில்லாவை விதிவிலக்கான நேர்மறைக் கதாபாத்திரமாகவும் நான் காட்ட முயலவில்லை. அவளை நீங்கள் நுணுக்கமாகப் பின்தொடர்ந்தால்,

குறிப்பிட்ட சில சூழல்களில் அவளால் சிறப்பான நடத்தையை வெளிப்படுத்த முடிகிறது என்பதை உணர்வீர்கள். மற்றவர்களால் அது முடிவதில்லை. அதனால்தான், அவளை உலகமயமாக்கலையும் அன்பிற்கான ஏக்கத்தையும் வெளிப்படுத்தக்கூடிய, அதே நேரத்தில் மிக எளிதில் அடையாளம் கண்டுக்கொள்ளக்கூடிய ஒரு மெல்லிசையுடன் தொடர்புப்படுத்த விரும்பினேன். அவள் ஒரு மிகச் சிறிய கிராமத்தில் இருக்கிறாள். ஆனால், அவளுடைய கதாபாத்திரத்தின் இந்த இருவேறு கூறுகளை இணைக்கும் ஏக்கவுணர்வு குறித்த பிரபலமான பாடலை அவளால் அணுக முடிகிறது.

**தனிமையுணர்வு, உலகமயமாக்கல், அதிகாரம், சகிப்புத்தன்மை, தன்னைத் தற்காத்துக்கொள்ளுதல் போன்றவை குறித்துப் பேசினீர்கள். திரைக்கதையை எழுதும்போது, அதில் இவை அனைத்தும் ஒன்றைவிட மற்றொன்று கூடுதலாக இல்லாதபடி, அனைத்தும் சமவிகிதத்தில் இருப்பதை எப்படி உறுதிசெய்துகொண்டீர்கள்?**

எழுதும்போது என்னிடம் நம்பிக்கை மட்டுமே நிறைந்திருக்கும். படமாக்கலுக்கு உகந்த திரைக்கதையை எழுதி நிறைவுசெய்ததும், கதாபாத்திரங்களையும் வசனங்களையும் மீண்டும் நான் திருத்தி எழுதுவேன். இதன்மூலம் என்னுடைய கருத்துகள் நேரடியாக அவற்றின் மீது படியாமல் இருப்பதை என்னால் உறுதிசெய்துகொள்ள முடிகிறது. அதேப்போல அவர்களுடைய செய்கைகளில் குறிப்பிட்ட அளவில் குழப்பம் இருப்பதையும் அவை 'நல்ல கதபாத்திரம்', 'தீயக் கதாபாத்திரம்' என்று வெளிப்படையாக இல்லாதிருப்பதையும் உறுதிசெய்துகொள்வேன். இந்த வகையான எனது திரைப்படமாக்கலில் எனது நோக்கமென்பது, புறவயமான சித்தரிப்பை மட்டுமே சார்ந்திருக்கக்கூடாது என்பதே. ஆனால், அதே சமயத்தில், யதார்த்தத்தை நான் உணரவும், சில நபர்கள் எடுக்கும் சில தீர்மானங்களின் சூழலுடன் என்னைத் தொடர்புப்படுத்தக்கூடியதுமான புறநிலைத்தன்மையின் அருகில் ஓரளவு நான் செல்ல விரும்புகிறேன். அந்தக் கதாபாத்திரங்களின் அறம் குறித்து நான் எதுவும் கருத்து சொல்வதில்லை; உங்களுக்குச் சில தகவல்களை வழங்குகிறேன், அதை வைத்து நீங்கள் உங்கள் சொந்தக் கருத்துகளை உருவாக்கிக்கொள்ளலாம். ஜனநாயகத்தின் முடிவையும் அதை நாம் எப்படி பார்க்கிறோம் என்பதையும் அரசியல் சரித்தன்மையின் பக்க விளைவுகளையும், (அது மக்கள் என்ன பேசுகிறார்கள் என்பதில்தான் கவனம் செலுத்துகிறது, அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பது குறித்து அல்ல) ஓரளவுக்கு இத்திரைப்படம் பேசுகிறது என்று கருதுகிறேன். அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதும், அவ்வாறு ஏன் நினைக்கிறார்கள் என்பதும்தான் இங்குச் சிக்கலாக இருக்கிறது. மக்கள் என்ன நினைக்கிறார்கள், எப்படி நடந்துகொள்கிறார்கள் என்பனவற்றில் எல்லாம் ஏதேனும் ஆழமான மாற்றங்களை உண்டாக்க விரும்பினால், அவர்கள் தங்களை அசலாக வெளிப்படுத்திக்கொள்ள நீங்கள் அனுமதிக்க வேண்டும் என்று கருதுகிறேன். ஆனால், இது தடைசெய்யப்பட்டிருக்கிறது. இதைப் பேசக்கூடாது என்று அவர்களைக் கட்டுப்படுத்தினால், ஒரு மாற்றமும் நிகழாது. அதோடு, அவர்கள் வாக்களிக்கும்போது அது உங்களுக்குப் பெரும் ஆச்சர்யத்தை உண்டாக்கிவிடும். மக்கள் எப்போதும் போலவேதான் நடந்துகொள்வார்கள். இது படத்திற்கு மட்டுமேயானதல்ல. ஏனெனில், எங்கு வேண்டுமானாலும் நிகழக்கூடிய ஒன்றைத்தான் திரைப்படம் பிரதிபலித்திருக்கிறது.

நாம் பொதுவாக, நமது சமூகத்திலும் கலை மற்றும் திரைப்படத் துறையிலும் குறிப்பிட்ட சில பிரச்சனைகளைக் கையாளுவதற்கு இப்போது துணிவதில்லை என்கிற உணர்வு எனக்கிருக்கிறது. நாம் முக்கியமான பல விஷயங்களைப் பேசாமல் தவிர்த்துவிடுகிறோம். கலை அப்படி இருக்கக்கூடாது. ஏராளமான தணிக்கைகளை எதிர்கொள்ளும் ஒரு நாட்டில் இருந்து நான் வருகிறேன். அதனால், மீண்டும் பழைய நிலைக்கே திரும்ப வேண்டிய சூழல் நமக்கு ஏற்படாது என்று நம்புகிறேன். திரைப்படக் கலை துல்லியமாக, இதுபோன்ற கடினமான விஷயங்கள் குறித்தே பேச முற்பட வேண்டுமென விரும்புகிறேன். அது உண்மையை நெருங்கிச் செல்ல வேண்டும். இந்தச் செயல்முறையில் நீங்கள் சொல்வது அரசியல் சரித்தன்மைகளைச் சற்றே மீறுவதாக இருந்தாலும் எவரையேனும் மேற்கோள் காட்டுவதாக இருந்தாலும் பிரச்சனையில்லை.

**சமூகமையத்திலுள்ள டவுன் ஹால் காட்சியை எடுத்துக்கொள்வோம். நீங்கள் இப்போது குறிப்பிட்ட அனைத்தும் அக்காட்சியில் ஓர் உச்சநிலையை எட்டுகிறது. அரசியல்ரீதியாகத் துளியும் சரியில்லாத கருத்துகளை மக்களிடம் இருந்துகேட்பது அவ்வளவு வேதனையளிப்பதாக இருந்தது. அதே சமயத்தில், அக்காட்சியில் திரண்டெழும் பல்வேறு குரல்களின் சங்கமத்தாலும் நான் துணுக்குறுகிறேன். பல நபர்கள் ஒன்றாக ஓரிடத்தில் திரண்டு தங்களை நாகரீகமான முறையில் வெளிப்படுத்திக்கொள்ளும் இதுபோன்ற தருணங்களை நம்மால் நிஜ வாழ்க்கையில் பெரும்பாலும் பார்க்கவே முடியாது.**

அந்தக் கூடுகை உண்மையில் நிகழ்ந்த ஒன்றுதான். அதன் வீடியோ பதிவொன்று ஆன்லைனிலும் இருக்கிறது. ஹங்கேரியர்களைப் புரிந்துகொள்ள விரும்புகிறவர்கள் அந்த வீடியோவைப் பார்க்கலாம். படத்தில் நான் பயன்படுத்தியுள்ள அனைத்துக் கருத்துகளும் - அரசியல்ரீதியாக மிகத்


R.M.N.

தவறாக கருத்துகள் பகிரப்படுவதைப் படத்தின் கதாபாத்திரங்கள் தங்கள் மொபைல்களில் பார்ப்பது உட்பட - உண்மையானவைதான். அதில் நான் எந்தவித மாற்றத்தையும் செய்யவில்லை. உண்மையில் நிகழ்ந்ததை விடவும் அரசியல் சரித்தன்மையற்ற ஒரு கருத்தைப் புனைவாக என்னால் உருவாக்கிவிட முடியாது. அவற்றை ஒழுங்குப்படுத்தித் தொகுத்தாலே போதுமானது. நானாக எதையும் உருவாக்கவேண்டிய தேவையிருக்கவில்லை. இணையதளமும் அது சாத்தியமாக்கக்கூடிய அநாயமதேயத்தன்மையும் ஏதோ ஒருவிதத்தில் மக்களிடத்தில் உள்ள தீயக் குணங்களை வெளிப்படுத்துவதற்கு வாய்ப்பளிப்பதாக இருக்கிறது. ஏன் இப்படி நிகழ்கிறது, இதுவெல்லாம் எப்படிச் சாத்தியம் என உங்களுக்குள்ளாகக் கேள்வியெழுப்பிக்கொள்ளும் அளவுக்கு எல்லா இடங்களிலும் வெறுப்பு நிரம்பியிருக்கிறது. ஏற்றுக்கொள்ள சங்கடமாக இருந்தாலும், நம் எல்லோருக்குள்ளும் இருக்கும் ஒரு பகுதியை அது வெளிச்சமிட்டுக் காட்டுகிறது. இந்தக் கண்ணோட்டத்தில் இருந்து பார்க்கும்போது, விலங்குத்தன்மைக்கும் மனிதத்தன்மைக்கும் (பரிவுத்தன்மை) இடையில் உங்களுக்குள் நிகழும் முரண்கள் குறித்தே இத்திரைப்படம் அதிகம் பேசுகிறது. வேடிக்கையான ஒரு விஷயம் என்னவென்றால் என்னிடம் முன்வைக்கப்படும் கேள்வி-பதில்களை இரு வகையாகப் பிரித்துக்கொள்ளலாம். ஒன்று, அதிகாரப்பூர்வமானது. அங்கு நான் மேடையில் நின்று மிகத் தன்மையாக என்னிடம் கேட்கப்படும் கேள்விகளுக்குப் பதிலளிப்பேன். மற்றொன்று, அதற்கு வெளியில் நிகழ்வது. அரங்கத்தைவிட்டு நான் வெளியேறியதும், என்னை நெருங்கி வருபவர்கள், ‘இந்தத் திரைப்படத்தில் காட்டப்பட்டுள்ளதைப் போன்ற மக்கள் இருப்பதை நாங்கள் முழுமையாகவே நம்புகிறோம். இவர்களைக் காட்சிப்படுத்துவதற்கு இப்போதாவது ஒருவருக்குத் தைரியம் வந்திருக்கிறதே!’ என்பார்கள். அதற்கு நான், ‘உங்களுக்கு இவை தொடர்பான என் கருத்து என்னவென்பது தெரியாது. படத்தில் நான் வெறுமனே மேற்கோள்களை மட்டுமே காட்டியிருக்கிறேன்’ என்பேன். பொதுவெளியில் உங்கள் எண்ணங்களைச் சத்தமாகப் பகிர்ந்துகொள்வதைவிட, நீங்கள் தனிமையில் அமர்ந்து அவற்றை உங்களுக்குள்ளாக மட்டுமே அசைபோடும்போது தனிநபர் உண்மைகளுக்கும் அசலான உண்மைகளுக்கும் இடையிலான இடைவெளி பெருகிவிடுகிறது. இதைச் சரியாகக் கையாளத் தெரியவில்லை என்றால், பாசாங்குத்தனமாகக் கருதப்படும் அபாயமும் இதில் அதிகமிருக்கிறது. உங்களால் சமூகத்தில் உண்மையான மாற்றங்கள் எதையும் இதனால் எதிர்பார்க்க முடியாமல் ஆகிவிடும்.

**தலைப்பு குறித்த யோசனை உங்களுக்கு எப்போது வந்தது? திரைப்படத்தில் நீங்கள் என்ன செய்திருக்கிறீர்களோ அதுகுறித்த ஒரு மனப்பதிவை அத்தலைப்பு உண்டாக்குகிறது: மனித மூளையையும் அதன் வெவ்வேறு பகுதிகளில் இருந்து துளிர்தெழும் எதிரெதிரான தூண்டல்களையும் பகுப்பாய்வு செய்வது?**

திரைக்கதை எழுதும்போதே இந்தத் தலைப்பு உருவாகிவிட்டது. நீங்களாகவே ஒரு தலைப்பைத்

தீர்மானித்துவிடுவது சிறந்தது. இல்லையெனில், எல்லோரும் ஒவ்வொரு தலைப்பைப் பரிந்துரைக்கத் தொடங்கிவிடுவார்கள். இந்தத் திரைப்படத்தின் சில பகுதிகள் தெளிவற்றதாக இருப்பதால் வெவ்வேறு விதமான அர்த்தப்படுத்தல்களும் விளக்கங்களும் மேற்கொள்ளப்படும் என்பது நான் எதிர்பார்த்ததுதான். ஆனால், தலைப்பு குறித்தும் இத்தகையை ஆராய்ச்சிகள் செய்யப்படும் என்பதை நான் எதிர்பார்த்திருக்கவில்லை. எனது முந்தைய படத்தின் தலைப்பு பொருத்தமானதா பொருத்தமற்றதா என்று எனக்கு தெரியவில்லை. ஏனெனில், பிற மொழிகளில் அந்தத் தலைப்பைத் துல்லியமாக மொழிபெயர்க்க முடியாமல் இருந்தது. ஆனால், எங்கெல்லாம் சிறப்பாக மொழிபெயர்க்கப்பட்டதோ அங்கெல்லாம் அந்தத் தலைப்பு பொருத்தமானதாக இருந்தது. கேன்ஸில் எல்லோரும் இந்தத் தலைப்பு ருமேனியாவைக் குறிப்பதாகக் கருதினார்கள். ஆனால், அது சரியானது அல்ல. இந்தத் திரைப்படம் ருமேனியாவில் ஏதோவொரு பகுதியில் நடப்பதாக இருந்தாலும்கூட, உலகம் முழுவதும் நடந்துகொண்டிருக்கும் குறிப்பிட்ட சில விஷயங்கள் குறித்துதான் இது பேசுகிறது. சிலர் இந்தத் தலைப்பு படத்தின் கதபாத்திரங்களைக் குறிப்பதாகக் கருதினார்கள். R - Rudi, M - Matthias, N - Noi ('us'). சிலர் படத்தில் வருகின்ற மூன்று இனங்களை இத்தலைப்பு குறிப்பதாகக் கருத்து தெரிவித்தார்கள்: ருமேனியர்கள், ஹங்கேரியர்கள், ஜெர்மனியர்கள். ருமேனிய மொழியில் இது முறையே R.M.N என்றுதான் வரும். ஆனால், இத்தகைய புரிந்துகொள்ளல்களில் எனக்கு மிகவும் விருப்பமானது எதுவென்றால், தலைப்பு 'raman' அல்லது 'remain' என்பதைக் குறிக்கிறது என்கிற கருத்துதான். 'நான் இருக்கிறேன்' என்று சொல்வதைப்போல இது இருக்கிறது. 'மாற்றங்களை உருவாக்குவதற்கே நான் இங்கு இருக்கிறேன். ஏனெனில், திரையில் நான் என்னையேதான் பார்க்கிறேன். நான் எப்படி இருக்கிறேன் என்று திரையில் காட்டப்படுகிறது. ஆனால், அந்த 'நானின்' அம்சத்தை நான் வெறுக்கிறேன்'. இதுவொரு சிறப்பான இடையீடு, இப்படி நான் ஒருபோதும் திட்டமிட்டிருக்கவில்லை என்றாலும்கூட.

**படத்தின் முடிவு ஒருவிதமான சர்ரியலிஸத்தன்மையில் இருக்கிறது. முழுமையாக விளக்க வேண்டுமென்று கோரவில்லை, ஆனால், அந்த இறுதிக் காட்சியில் இருந்து பார்வையாளர்கள் என்ன விளங்கிக்கொள்ள வேண்டும் என்று சிறிய அளவில் குறிப்பிட முடியுமா?**

திரைப்படங்களைப் பொருத்தவரையில், மக்கள் உங்கள் திரைப்படத்தில் இருந்து எதை எடுத்துச் செல்ல வேண்டும் என்பதை ஒற்றைக் கோணத்தில் துல்லியமாக வார்த்தைகளால் வர்ணித்து தெரிவித்துவிடக்கூடாது. அதனால் படத்தின் இறுதியில் இருந்து மக்கள் எதை விளங்கிக்கொள்ள வேண்டும் என நான் விரும்புகிறேன் என என்னிடம் கேட்டால், அங்கு ஒரு கதாபாத்திரம் இருக்கிறது, அது கூடுதலாகவோ குறைவாகவோ முற்றிலும் வேறுபட்ட இரு உலகங்களில் இருந்து ஏதேனுமொன்றைத் தேர்வுசெய்ய வேண்டும். அதில் ஒன்று இருண்மையானது. ஏராளமான உருக்கள் பிதுங்கியெழும் நமது ஆழ்மனதுடன் அது தொடர்புடையதாக இருக்கிறது. அப்படி வெளியே வருவது மனிதர்களாக இருக்கலாம், விலங்குகளாகவும் இருக்கலாம், உள்ளுணர்வாகவோ கற்பனையில் உயிர்ப்பிக்கும் பூச்சிகளாகவோ அல்லது பதற்றத்தின் வெளிப்பாடகவோ இருக்கலாம். அவை என்னவென்று எனக்குத் தெரியாது. ஆனால், அவை தீவிரமானவையாக இருக்கின்றன. அங்குச் செல்லும்படி அவனைத் தூண்டுபவையாக இருக்கின்றன. இப்படித்தான் என்னால் விளக்கமளிக்க முடியும்.

**செல்லோவை சில்லா வாசிப்பதே அங்கிருக்கும் கரடியை அமைதிப்படுத்துவதற்காகத்தான் என்று விளக்கும் ஒரு சுவாரஸ்யமான இடையீட்டை நான் கேள்வியுற்றேன்.**

இறுதிக்காட்சி தொடர்பான ஒரு சுவாரஸ்யமான இடையீடுதான் அது. நான் அக்காட்சியில் என்ன வெளிப்படுத்த விரும்பினேன் என்பதை ஓரளவு அது நெருங்குவதாக இருக்கிறது. ஏனெனில் அவள் தொடர்ந்து மத்தியாஸைத் தன் பக்கம் இழுப்பதற்கு முயன்றபடியே இருக்கிறாள். மற்றொருபுறத்தில், அங்கு இசை இருக்கிறது, நல்லுணர்வு இருக்கிறது, ஒளியும் சமூகமும் அரவணைப்பும் இருக்கின்றன. இந்த இரண்டுத் தரப்புகளில் ஏதேனுமொன்றை மத்தியாஸ் தேர்வுசெய்ய வேண்டும். ஒவ்வொரு பார்வையாளரும் இந்தத் தேர்வை மேற்கொள்ள வேண்டும். அப்படியில்லை எனில், இந்தக் கடினமான சூழலில் நீங்கள் யார் என்பதை அறிந்துகொள்வது ஆச்சர்யமூட்டக்கூடியதாக அமைந்துவிடும். யதார்த்தத்திற்குச் சற்றே வெளியே இருப்பதாக நாம் அர்த்தப்படுத்திக்கொள்ளும் இவை அனைத்தும் நமக்குள் இருக்கும் உள்ளுணர்வுகளுடன்தான் பேசுகின்றன. நமக்குள் இருக்கும் மிருக உணர்வுகளை மட்டுப்படுத்துவதற்கான தேவையை அவை குறிக்கின்றன.

ராம் முரளி <raammurali@gmail.com>

# அம்ருதா வெளியீடுகள்




சொப்பன பூமியில்
₹ 130
*பக்கங்கள்: 180*




மனச்சீர்கேடு
தரும்
அலைக்கழிப்புகள்
₹ 200
*பக்கங்கள்: 248*

ரெண்டாம் ராயர்
காப்பி கிளப்




ரெண்டாம்
ராயர்
காப்பி கிளப்
₹ 160
*பக்கங்கள்: 200*

குற்றத்தின்
புனைபெயர்



பாலு சத்யாவின்
குற்றத்தின்
புனைபெயர்
₹ 98
*பக்கங்கள்: 112*

**அம்ருதா**
#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 044 - 2435 3555, 94440 70000.
மின்னஞ்சல்: info.amrudha@gmail. com, இணையதளம்: www. amruthamagazine. com

# முயங்கொலிக் குறிப்புகள்

கயல்
ஓவியம்: நடேஷ்

37.

கூதற் காற்றினிடை
குயிலின் பாடல்
சாளரத்தினூடே
ஒலிக்கிறது.

நறுமணப் புகையிட்ட
கூந்தலை விரித்துக் கிடத்தியபடி
மஞ்சத்தில் படுத்திருக்கிறேன்.

சந்தனக் குழம்பெடுத்து
முகிழ்த்திருக்கும் தாமரை மொக்குகளில்
தொய்யில் எழுதுகிறதவன்
வீரிய விரல்கள்.

கரு நீலக் குவளையின்
இதழ் நுகர்ந்த கிறக்கத்தில்
மயிற் பீலிகொண்டு
தேகம் நெடுகிலும் வருடுகிறான்.

இடையிறுக்கி அருகணைத்து
இதழின் கதவை
இன்பச் சொல்லொன்றால் திறக்கிறான்.

உடைந்து நான் மருக
உள்ளுக்குள் ஓர் நதி
ஊற்றெடுத்துப் பெருகத் தொடங்குகிறது.

அந்தர நொடியில்
எங்கிருந்தோ ஒலிக்கிற
காண்டாமணியின் நாவசைவு
நெருங்கி வருகிறது
இப்போது
இன்னும் அருகே.

தன்னிச்சையாய்க் கைகள் துழாவி
பறவைகளின் பாடல் ஒலிக்கும்
அலைபேசி அலாரத்தை அணைக்கிறேன்.

இடை நழுவிய ஆடை கணுக்காலில் வழியக்
கட்டிலில் அருகேக் கிடப்பவனைப்
பார்த்தபடி
அட்டாச்சுடு பாத்ரூம்
ஹீட்டரின் குமிழ் திருப்பித்
துரிதகதியில் கதவு திறந்து
வாசலில் பால் பாக்கெட்டை எடுத்த நொடி
முகத்தில் அடிக்கும்
நகரத்தின் ஆறுமணி வெய்யில்.

38

தாழைப் புதர்களில்
மரக் கொடிகளென
பின்னிப் பிணைந்து
கிடக்கின்றன
பச்சைப் பாம்புகள்.



மகிழ மரக் கிளையமர்ந்து
கொஞ்சிக் கொஞ்சி
முத்தமிடுகின்றன
செந்தலைக் கிளிகள்.

சரமாய் மழை இறங்க
கல்மண்டபங்களில் அடைக்கலமாகும்
மரகதப் புறாக்களின் குன்னலோசை
கோயில் கோபுர மாடமெங்கும்.

நாங்கள் மானுடர்கள்...
இருக்க வீடு
படுக்க மெத்தைக் கட்டில்
பயணிக்கவொரு
சிறிய கார்
பெரிய தொலைக்காட்சி

பிள்ளைகளுக்கு
நல்ல பள்ளி, கல்லூரி
விடுதிச் செலவுகள்
என
மொத்த இளமையையும்
மிச்சம் வைக்காமல்
காலம்
முழுதாய் விழுங்கிவிட
நினைவிலேயே இல்லை
முயங்கிய பொழுதுகள்
அவை எதிலும்
நிசமாய் மகிழ்ந்திருந்தோமா?
இருவரில் ஒருவராவது!

தொடரும்

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

# ஜாதகம்

**ஆ. ஆனந்தன்**
**ஓவியம்: ராஜ்குமார் ஸ்தபதி**

ஞாயிற்றுக்கிழமை தூக்கத்தைக் கெடுப்பதெற்கென்றே ஏதாவது நடக்கும். இன்று தொலைபேசி. எடுத்தவுடன், ஒரு அழுகுரல் என்னை உசுப்பி விட, "ஹலோ" என்றேன்.

"ஐயா, ஐயா, பெருமாள் மருந்தக் குடிச்சிட்டான்யா, சாகக் கிடக்கான்யா. இங்க அரசாங்க ஆஸ்பத்திரிலேதான் சேர்த்திருக்கேன்யா. ரவைக்குள்ள முடிஞ்சிரும்ன்னு சொல்லி பயமுறுத்துராங்கயா. கொஞ்சம் வாங்கய்யா."

அழுகை அதிகமாக, அது கூத்தபெருமாள் அம்மாவின் குரல்தான் என கண்டுகொண்டேன். "சரி இதோ வர்ரேன்"னு எழுந்தேன்.

அந்த அம்மாவின் பதற்றம் என்னையும் தொற்றிக்கொள்ள, கொஞ்சம் வேகமாக எழுந்து, வாசல் கதவைத் திறந்தேன். ஞாயிற்றுக்கிழமையின் சகல அடையாளங்களுடன், அந்த காம்பவுண்ட் திகழ்ந்து கொண்டிருந்தது. எதிர் வீட்டுக் கேட்டில் அன்றைய தினசரி இன்னும் எடுக்கப்படாமல் அப்படியே இருந்தது.

நான் மதுரையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். மூன்று வருடங்களாகிவிட்டது என என்னை மதுரைக்கு மேற்கே நூற்றி அறுபது கிலோ மீட்டர் தள்ளியுள்ள இந்த ஊருக்கு



மாற்றிவிட்டார்கள். இந்த ஊர் எங்கே இருக்கிறது, மதுரையிலிருந்து எப்படிப் போகவேண்டும், பஸ்ஸா ரயிலா என்று எனக்கும் அலுவலக நண்பர்களுக்கும் தெரியவில்லை. விசாரிக்கும்பொழுதுதான் தெரிந்தது, மதுரையிலிருந்து பஸ் பயணம் மட்டும்தான் சாத்தியம். போய்ச்சேர ஆறு மணி நேரம்.

எனது வேண்டுகோள்கள் எதுவும் காது கொடுத்துக் கேட்கப்படாமல், ஒரு வெள்ளிக்கிழமை என்னை அலுவலகத்திலிருந்து விடுவித்து, திங்கட்கிழமையே அங்கே போய் ரிப்போர்ட் பண்ண வேண்டுமென அதிகார வர்க்கம் சொல்லிவிட, திங்கட்கிழமை அதிகாலை ஐந்து மணிக்கே பஸ் ஸ்டாண்டுக்கு வந்து இந்த ஊருக்குப்போகும் முதல் பஸ்ஸில் ஏறி ஜன்னல் ஓரமாக உட்கார்ந்து கொண்டு, தூங்கத் தொடங்கினேன்.

தொடர்ந்து ஐந்தரை மணி நேரம் பயணம் செய்து இந்த ஊரில் இறங்கியவுடன்தான் பசித்தது. ஆனால், சுற்றிப் பார்த்தால் டீக்கடைகளும் வெற்றிலை பாக்குக் கடைகளுமாகத்தான் இருந்தது. ஏற்கனவே நம்மை இப்படி ஒரு ஊருக்கு மாற்றிவிட்டார்களேன்னு நொந்து போயிருக்க, பஸ் பயணமும் பசியும் இன்னும் என்னை நோக வைக்க, ஒரு தீர்க்க முடியாத சோகத்தை முகமூடி போல அணிந்துகொண்டு, இந்த ஊர் மண்ணில் நின்று கொண்டிருந்தேன்.

காலை பதினோரு மணிதான். ஆனால்,



நல்ல வெயில் கொளுத்தும் மதியப் பொழுது போல் இருந்தது. அலுவலகம் எங்கேயிருக்கிறது எனக் கேட்கலாமென எதிரிலிருந்த கடையை அணுகினேன். கடைக்குள், ‘இங்கு லஸ்ஸி கிடைக்கும்’ என்ற போர்டைப் பார்த்ததும், என் சலிப்பு எல்லாம் வேர்வையைப் போல் வழிந்தோட ஆரம்பித்தது. "ஒரு லஸ்ஸி" என்றேன். கடைக்காரர் என்னை நன்றாகப் பார்த்துவிட்டு, ஒரு உருண்டை செம்புக்குள் தயிரை விட்டு லஸ்ஸி மிஷினை சுழல விட்டார். மத்துச் சுழன்று தயிர் வாடை தெறிக்கையில் சீனியை அள்ளிப் போட்டு நுரைக்கவிட்டார்.

குடித்துவிட்டு, "லஸ்ஸி நல்லா இருந்தது" என்றேன். பணத்தைக் கொடுத்துவிட்டு, "இங்க லஸ்ஸியெல்லாம் நல்லா போகுமா" என்று கேட்டேன். "சார் இது கொஞ்சம் படிச்சவங்க நிறைஞ்ச ஊர். தெற்கே, வடக்கே போய்ப் பழகினவங்க இருக்காங்க சார், அதுனாலதான்." கொஞ்சம் இழுத்து நிறுத்தினார்.

நான் என் அலுவலக முகவரியைச் சொல்லி விவரம் கேட்க, "சார் நீங்கதான் புதுசா வந்திருக்கிற மானேஜரா" என்றார். "ஆமாம்" என்று சொல்ல, "சார் இப்பதான் உங்க பேங்கில இருந்து கிளார்க் வந்திட்டுப் போறாரு" என்று கூடுதல் தகவல்களையும் கொடுத்து, வழியும் சொன்னார். லஸ்ஸியும் அவரது பேச்சும் எனக்கு, ஊரின் மேல் ஒரு பிடிப்பை உண்டாக்கியது. கொஞ்ச தூரம் வரை அந்த மத்துச் சிலுப்புகிற சத்தம் கூட வந்தது.

கடைக்காரர் சொல்லிய வழியில் நடந்து அலுவலகத்தை அடைந்தேன். அலுவலகம் ஒரு பெரிய கோடவுன் போல இருந்தது. அது ஒரு தனிக் கட்டிடமாக, ஆனால், டிப்போவுடன் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தது. ஒரு புறம் கூட்டுறவு வங்கிக் கிளை மேலாளருக்கும் அவரது கிளார்க்காவும் டிப்போ மேனஜராகவும் இருப்பவருக்கும் என இரண்டாகப் பிரிக்கப்பட்டு இரண்டு அறையாக இருந்தது.

என் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தவர்கள் போல் டிப்போ மேனேஜரும் பியூனும் வந்து வரவேற்க நான் அலுவலகத்துக்குள் நுழைந்து என் மேஜையில் அமர, பியூன் டீ வாங்க வெளியே கிளம்ப, டிப்போ

மேனேஜரை வற்புறுத்தி உட்கார வைத்தேன்.

டிப்போ மேனேஜர் கூத்தபெருமாள் தான். தனிப்பட்ட தகவல்களைச் சொல்லிக்கொண்டு இருந்தார். தனக்கும் பியூன் ஒச்சாத்தேவர் இருவருக்கும் வயது முப்பத்தைந்து மற்றும் முப்பது என்றும், ஒச்சாத்தேவருக்கு திருமணமாகிவிட்டது என்றும் சொல்லிவிட்டு, தலையைக் குனிந்து, "எனக்கு இன்னும் கல்யாணம் ஆகலை, பார்த்துக்கிட்டு இருக்காங்க சார்" என்றார்.

கூத்தபெருமாள், தயக்கத்தோடு, "சாருக்கு ஃபேமிலி இருக்கு இல்லையா?" என்று கேட்டார். கல்யாணம் ஆகிவிட்டதா என்பதைத்தான் அப்படிக் கேட்கிறார் என்று தெரியாதா? "கல்யாணம் ஆயிட்டுது கூத்தபெருமாள். செட்டில் ஆனவுடனே கூட்டிக்கிட்டு வரணும்" என்று சிரித்தேன். தானாக உண்டாகிற மிகச் சின்ன சிரிப்புத்தான். அதைக் கூட கூத்தபெருமாள் ஏற்றுக்கொண்ட மாதிரித் தெரியவில்லை. இறுக்கமாக இருந்த முகத்தைத் தளர்த்த வேண்டி, "சின்ன வயசா இருக்கேன்கிறதால கல்யாணம் ஆகியிருக்காதுண்ணு தோணியிருக்கும் உங்களுக்கு" என்றேன். கூத்தபெருமாள் அதற்கு எந்த பதிலையும் சொல்லவில்லை.

மழைத்தண்ணீரைக்காலை அகட்டித்தாண்டுவது போல வேறு விஷயங்களைப் பேச ஆரம்பித்தார்.

சம்பிரதாய அறிமுகம், ஊர் பற்றிய விசாரிப்புகளுக்குப் பிறகு, "வாங்க கூத்த பெருமாள் டிப்போவுக்குப்போய்ஸ்டாக்வெரிபை பண்ணீரலாம்" என எழுந்தேன்.

"சார் என்னை நீங்க பெருமாள்ன்னே கூப்பிடலாம்" என்றார்.

டிப்போவுக்குள் நுழைந்தோம். உரம், விதைகள், பூச்சி, பூசான மருந்துகள், சில பழுதடைந்த ஸ்பிரேயர்கள், பழைய ரிக்கார்டுகள் என எல்லாம் ஒரு சுவர் ஓரமாக அடுக்கி வைக்கப்பட்டிருக்க, மொத்த டிப்போவும் காலியாக இருந்தது. அந்த அளவுக்கு அதிகமான நீள அகலம் கொண்ட டிப்போ, எனக்கு எப்பவாவது ரயில் வந்து போகிற ஒரு ஆளற்ற ரயில் நிலைய பிளாட்பாரத்தை நினைவு படுத்தியது.

"மதியம் சாப்பிட என்ன சார் செய்யப்போறீங்க" என்று பெருமாள் கேட்டவுடன், "ஒச்சாத்தேவரை ஏதாவது வாங்கிட்டு வரச் சொல்லித்தான் சாப்பிடணும்" என்றேன்.

"இல்ல சார் இன்னைக்கு ஒரு நாளைக்கு எங்க வீட்ல சாப்பிடுங்க, நாளையில இருந்து வேற ஏற்பாடு பண்ணிக்கலாம்" என்று பெருமாள் சொல்ல, நான், "இல்லை பெருமாள் இன்னோரு நாள் பாத்துக்கலாம்" என்றேன்.

"எங்க வீட்ல தினமும் இப்படி சமைக்க மாட்டோம் சார், இன்னைக்கு கொஞ்சம் விசேஷமா சமையல் இருக்கும், இன்னைக்கே போலாம் சார்" என்றார்.

"விசேஷமா?" என்றவுடன், "எனக்கு இன்னைக்கு பிறந்த நாள் சார்" என்றார். நான் அவருக்கு கை கொடுத்து வாழ்த்திவிட்டு, "அடுத்த பிறந்த நாளுக்குள்ள கல்யாணச் சாப்பாடு போடுங்க" என்றேன். கூத்தபெருமாளுக்கு ரொம்ப சந்தோஷம். "தாங்க்ஸ் சார்" என்று இரண்டு மூன்று முறை கையைக் குலுக்கினார்.

"ஒச்சா?" என்றேன். "அவனும்தான் சார், அவனுக்கு நேத்தே சொல்லிட்டேன். அதுனால அவன் சாப்பாடு கொண்டு வந்திருக்கமாட்டான்" என்றார்.

பெருமாளின் வீட்டுக்கு இரண்டு புறமும் திண்ணைகள். ஒரு பக்கம் பெரியதாகவும் மறுபக்கம் சிறியதாகவும் மிகவும் சுத்தமாகவும் இருந்தது. உள்ளே நுழைந்ததும் கொஞ்சம் பெரிய அளவில் சதுர வடிவில் செங்கல் தரை, திண்ணைகளை விட சுத்தமாக இருந்தது. கிழக்கு சுவரை ஒட்டி சமையல்கட்டும் அதற்கு அடுத்தாற்போலவே ஆவென விரிந்த ஒரு அறையும் இருக்க, புற வாசலுக்கு ஒரு கதவும் இருந்தது. புற வாசலில் ஒரு கிணறும் மறைக்கப்பட்ட குளியல் அறையும் இருந்தது. வீடு எங்கும் சுத்தமாக இருக்க எனக்கு பெருமாள் மேல் ஒரு வாஞ்சையும் அவரது அம்மாவின் மேல் ஒரு மரியாதையும் ஏற்பட்டது.

வீட்டுக்குள் இருந்து பெருமாள் அம்மாவின் குரல் வர, மூவரும் சாப்பிடக் கிளம்பினோம். சுவரையொட்டி விரிக்கப்பட்டிருந்த பாயில் அமர, வாழை இலையில் ஒரு ருசியான சாப்பாடு. நான் கூச்சப்படாமல் சாப்பிடத் தொடங்கினேன். பசியும் நல்ல ருசியான சாப்பாடும் சேர்ந்துகொள்ள, பொறுமையாகச் சாப்பிட்டேன்.

பறிமாறிக்கொண்டே பெருமாளின் அம்மா என் குல கோத்திரங்களையும் சமூகத்தையும் ஒரு வெகுளித்தனத்துடன் கேட்க நானும் எல்லாவற்றையும் சொன்னேன். அவர்கள் மகிழ்ந்து போய், "நாங்களும் உங்க சமூகம்தான்" என்று சொல்லிக் கொஞ்சம் சந்தோசப்பட்டுக் கொண்டார். கூத்தபெருமாள், ஒச்சாவைப் பார்த்து லேசாகச் சிரித்துக்கொண்டார்.

"உங்களுக்குத் தெரிந்தவகையில் யாராவது பொண்ணு இருந்தா சொல்லுங்க சார். இவனுக்கு முப்பத்தைந்து வயசாகுது, பொண்ணே அமையமாட்டேங்குது" என்று பெருமாள் அம்மா சொன்னவுடன், "நான் ஊருக்குப் போகும்போது எங்க அப்பாகிட்ட சொல்றேன். எனக்கு எதுவும் தெரியாது" என்று சொல்லிவிட்டு, சாப்பாட்டுக்கு நன்றி சொன்னேன்.

கிளம்பும்போது சுவரில் மாட்டப்பட்டிருந்த

அந்தப் படத்தைப் பார்த்துக்கொண்டு நின்றேன். கூத்தபெருமாள் அம்மாவுக்கு அந்தப் படத்தை நான் பார்த்ததில் சந்தோஷம் போல. அவராகவே முன்வந்து, "ஸ்டுடியோல எடுத்தது தம்பி. கல்யாணம் முடிஞ்ச புதுசுல எடுத்தது" என்றார்.

அடுத்த கட்டுக்குப் போயிருந்த கூத்தபெருமாள், என்னைக் காணோம் என்று மறுபடி உள்ளே வந்தார். "பெருமாள், உங்க அம்மாவைப் பாத்தா ஹைஸ்கூல் போகிற பிள்ளை மாதிரி இருக்கு" என்றேன். கூத்தபெருமாள் ஒன்றுமே சொல்லவில்லை. வாசல் பக்கம் இருந்து, "போலாமா ஒச்சு" என்று எனக்குக் கேட்கும்படி சத்தம் கொடுத்தார்.

அந்த சின்ன ஊர் மக்களின் அன்பினாலும் ஒத்துழைப்பினாலும் எனக்கு அந்த ஊரும் அந்த வேலையும் பிடித்துப்போக மனைவியையும் அழைத்துக்கொள்ளலாம் என முடிவுக்கு வந்துவிட்டேன். ஒச்சாத்தேவர், "அம்மாவங்க எப்போ வருவாங்க சார்?" என்று சாதாரணமாகக் கேட்கும் போதுகூட, கூத்தபெருமாள் தன் காதிலேயே விழாதது போல் உட்கார்ந்திருப்பார்.

ஒரு நாள், அலுவலக வாசலில் வந்து நின்ற பெருமாளின் அம்மாவைப் பார்த்து நான் ஆச்சர்யப்பட்டு, உள்ளே அழைத்து உட்காரச் சொன்னேன். வெகுநேரம் பேசாமல் அவர்கள் உட்கார்ந்திருக்க, நானே, "சொல்லுங்க" என்று சொன்னவுடன், அவர்கள் கண்களிலிருந்து கட்டுப்படுத்த முடியாத அளவிற்கு கண்ணீர் கொட்டத் தொடங்கியது. புடவைத் தலைப்பால் கண்களையும் மூக்கையும் துடைத்துவிட்டு என்னை ஏறெடுத்துப் பார்த்துவிட்டு மீண்டும் தலைகுனிந்து கொண்டார்.

"பெருமாள் இன்னைக்கு எதுக்கு லீவு" எனக் கேட்டேன்.

"எங்க சொந்தக்காரங்க ஒருத்தங்களுக்கு மதுரையில கல்யாணம்."

"நீங்க போகலையா."

"இல்ல சார், ஒருத்தர் போனாப் பத்தாதா."

"சரி சொல்லுங்க எதுக்கு வந்தீங்க."

"உங்களைப் பாக்கத்தான் சார்."

"என்னயவா, சரி சொல்லுங்க."

ஒச்சாத்தேவரை, டீ வாங்கி வர அனுப்பிவிட்டு பெருமாளின் அம்மாவைப் பார்த்தேன். மீண்டும் தலை குனிந்து கொண்டு இருந்தவர் நிமிர்ந்து, "சார் என்னத்தச் சொல்ல" என்றார்.

"பரவாயில்ல சொல்லுங்க."

"நேத்து அவங்கூட பெரிய சண்டை சார்."

"என்ன சண்டை, உங்க குடும்ப விஷயம்ன்னா எங்கிட்ட சொல்ல வேண்டாம், வேறன்னா சொல்லுங்க" என்றேன்.

"உங்களுக்குத் தெரியாதது என்ன சார் இருக்கும். அப்படியே, இருந்தாலும் நீங்க தெரிஞ்சுக்கிட்டா தப்பு ஒண்ணும் இல்ல."

"சரி சொல்லுங்க."

"சார், அவனுக்குப் பொண்ணு அமையாததுக்கு நான் என்ன சார் செய்ய. "இருபத்தெட்டு வயசில சாருக்கு கல்யாணம் ஆயிருச்சு, முப்பது வயசில ஒச்சாத்தேவனுக்கு ஒரு பொண்ணு இருக்கு. என் வயசு என்ன? எனக்கு ஒரு பொண்ணு பாத்து வைக்க உனக்கு துப்பில்லை, நீயெல்லாம் ஒரு அம்மாவா"ன்னு, ஆரம்பிச்சு ராத்திரி முழுசும் சண்டை சார். காலைலே, என்கிட்ட சொல்லாமக் கொள்ளாம போயிட்டான் சார்."

"பெருமாளப் பாத்தா அப்படி தெரியலயே."

"நீங்க ஒண்ணு சார், பெத்த அம்மை மனசுமுட்டிப் போய் சொல்லுதேன். அவன் அரைக்கிறுக்கன் சார், லூஸு சார்."

நான், அந்த அம்மாவே அப்படி சொல்லும் போது கொஞ்சம் யோசிக்கத் தொடங்கினேன்.

"இல்லையே, நல்லாதானே வேலை பாக்கிறாரு. கொஞ்சம் பணத்தாசை இருக்கு. கை கொஞ்சம் நீளம். நான், அதையெல்லாம் கட் பண்ணீட்டேன். அதனால இருக்குமோ."

"அதெல்லாம் இல்லை சார். அவங்க அப்பா பென்சன் எனக்கு வருது, அவனுக்கு சம்பளம் வருது. எங்க ரெண்டு பேருக்கும் அதுவே அதிகம் சார். எது அதிகம், எது குறைங்கிறது துட்டுலேயா சார் இருக்கு?"

"அப்புறம் என்ன."

"அவனுக்கு கல்யாணந்தான் பிரச்சனையே."

"எங்க அப்பாகிட்டகூடச் சொல்லிட்டு வந்திருக்கேன், இந்த வாரம் ஏதாவது தகவல் இருந்தா சொல்றேன்."

"இல்ல சார், நமக்குத் தெரியாதா, சில பேருக்கு முதல் ஜாதகத்திலேயே டக்குண்ணு அமையும். சில பேருக்குப் பத்து பார்த்தாலும் அமையாது, இன்னும் பத்து கொண்டுட்டுவாண்ணு கிரகம் சொல்லும். நாம என்ன செய்ய."

"பெருமாளுக்கு இதெல்லாம் புரியாதா, வெளிப்பழக்கம் உள்ள ஆளுதானே."

“அதான் சொன்னேல்ல சார், இந்த விஷயத்தில அவன் அரைக்கிறுக்கன்னு. நீங்க சொன்னது மாதிரி இதை புரியும்படியா படிச்சுப் படிச்சு எத்தனை தடவை சொல்லியிருப்பேன். நான் சொன்னதுக்கு, அவன் என்ன செய்வான் தெரியுமா. கரகரண்ணு எங் கையைப் பிடிச்சு இழுத்துக்கிட்டுப் போயி, நீங்க பார்த்திங்க இல்ல அந்த போட்டோ முன்னாடி நிறுத்துவான். பேய் பிடிச்சது மாதிரி. ”உனக்கு எத்தனை வயசில கல்யாணம் ஆச்சு, என் வயசில நான் உனக்கு எத்தனை வயசு பைய” என்று கண்டமானைக்குக் கெட்ட வார்த்தை சொல்லி, அம்மான்னு பாக்காமேலேயே கத்றான் சார். சொல்லுறதுதான் இப்படின்னா அந்தச் சமயத்தில் அவன் கைச் சைகை காட்டுகிறதைப் பார்த்தா நாண்டுக்கிட்டு நிண்னுருக்கணும் நான். மானமில்லாம உங்க எதுக்க உக்காந்து பேசிக்கிட்டு இருக்கேன்.”

எனக்கு அந்த முகத்தையும் அழுகையும் பார்க்கக் கஷ்டமாக இருந்தது. “நாளைக்கு வரட்டும் நான் சொல்லிப் பாக்கிறேன்” என்றேன்.

“வேண்டாம் சார். ஆபீஸ்ன்னு பாக்காம எதையாவது வாயில வந்ததைச் சொல்லிக் கத்துனாலும் கத்தீருவான் சார். உங்களுக்கு மட்டும் இல்லை, எல்லாத்துக்கும் அசிங்கமாப் போகும்.”

நான் அமைதியாக இருந்தேன்.

கூத்தபெருமாள் அம்மா தன் சேலைத் தலைப்பைக் கையில் வைத்துக் கும்பிட்டவாக்கில் கெஞ்சுவது போல் மறுபடி பேசினார். “இவ்வளவு அசிங்கத்தை சொல்லியாச்சு. இன்னும் கொஞ்சம் இருக்கு அதையும் சொல்லலாமா வேண்டாமான்னு நினைக்கிறேன். நான்தான் குதிங்காலில் நரகலை மிதிச்சுக்கிட்டு நடக்கேன். அந்த நாத்தம் உங்களுக்கு என்னத்துக்கு சாமி?” சேலை நுனியை வாய்க்குள் திணித்துக்கொண்டார்.

“நீங்க விரும்புனா சொல்லுங்க, இல்லாட்டா விட்ருங்க.”

“சொல்லீருதேன். யாருக்கிட்டேயாவது சொன்னேங்கிற நிம்மதியாவது எனக்கு இருக்கட்டும்.” பக்கத்தில் வந்து என் கையைப் பிடித்துக்கொண்டார். ”சினிமா மாதிரி இருந்துதுய்யா எனக்கு. போன வாரம். கிழமை எல்லாம் ஞாபகம் இல்லை. அடுப்படிக்குள்ளே வாரேன். அப்படியே திகைச்சுப் போயிட்டு எனக்கு. இவன் என்ன பண்ணினான் தெரியுமா. உடுத்தியிருந்த சாரத்தைத் இடுப்புக்கு மேலே ஏத்திக்கிட்டு எரியிற ஸ்டவ் மேல காலை அகட்டி வச்சுக்கிட்டு, குனிஞ்சு பாத்துக்கிட்டே கத்துதான். “இது இருந்து என்னத்துக்கு? எதுக்குமே பிரயோஜனம் இல்லாம இதை வச்சுக்கிட்டு நான் ஏன் ஆம்பிளைன்னு உயிரோட இருக்கணும். செத்திராலாம்ன்னு பாக்கிறேன்”ன்னு சொல்லிகிட்டு, நாங்க ஜோடியா இருக்கிற அந்த போட்டோவைப் பார்த்துக் கிட்டே, “நீ நல்லா இரு” என்று ஒரே கூச்சல். இதைக் கேட்கக் கேட்க எனக்கு வெட்கம் புடுங்கித்திங்க, வீட்ட விட்டு வெளியே போய் திண்ணையில படுத்துக்கிட்டேன் சார்.”

எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. “சரி நான் இந்த வாரம் ஊருக்குப் போகல, அப்பாவுக்கு கடிதம் எழுதி எதுவும் ஜாதகம் இருந்தா அனுப்பச் சொல்றேன்” என்றேன்.

”இப்ப ஒரு ஜாதகம் வந்திருக்கு. வர்ற வெள்ளிக்கிழமை அவனையும் கூட்டிகிட்டுப் போய் ஜோசியரைப் பாக்கலாம்ன்னு இருக்கேன்.”

“ஆமா வெள்ளிக்கிழமை லீவுதான், நானும் ஊர்லதான் இருப்பேன். சனிக்கிழமை ஆபீஸ் உண்டு, அன்னைக்கு பெருமாள்கிட்ட கேட்டுக்கிறேன். நல்லா செய்தியா வரும், கொஞ்சம் பொறுமையா இருங்க” என்று சொல்லி, பெருமாளின் அம்மாவை அனுப்பிவிட்டு, ‘இப்படி ஒரு அரைக்கிறுக்கனுக்கு, நாம பொண்ணு பார்த்துக் கொடுப்பது அவசியாமா’ன்னு யோசிக்கத் தொடங்கினேன்.

அன்றையத் தபால்களை, பெருமாள் லீவு என்பதால், ஒச்சாத்தேவர், என் மேஜையில் கொண்டு வந்து வைக்க, அதில் அப்பாவின் கடிதமும் அதனுடன் ஒரு முப்பத்திரெண்டு வயசுப் பொண்ணோட ஜாதகமும் இருந்தது. நாளைக்கு பெருமாளின் கையில் கொடுக்காலாம்ன்னு என் கைப்பையில் வைத்துக்கொண்டு அலுவலக வேலைகளில் ஈடுபடத் தொடங்கினேன்.

சனிக்கிழமை என் மேலதிகாரி மதுரையிலிருந்து வர, அவர் அழைத்தார் என அவருடன் போய்விட்டு, இரவு வீட்டுக்கு வர ஒன்பது மணியாகிவிட்டது.

ஆஸ்பத்திரியை அடைந்ததும் தலைமை மருத்துவரைப் போய்ப் பார்த்தேன். அவருக்கு என்னைத் தெரியும் போல, உட்கார வைத்துப் பொறுமையாகப் பேசினார்.

“சார் அவரை கொஞ்ச நேரத்துக்கு முன்னாடிதான் கொண்டு வந்தாங்க. விடியற்காலைலதான் விஷத்தைக் குடிச்சிருக்கணும். முதலுதவி, ஸ்டமக் கிளியரன்ஸ் எல்லாம் பண்ணியாச்சு, பாப்போம்.”

“மதுரைக்குக் கொண்டு போகலாமா.”

“இல்ல சார், உடம்பு தாங்காது, அவசரப்படாதீங்க. ஆனா இன்னும் உயிரோடதான இருக்காரு.”

அந்த கடைசி வார்த்தை என்னை ஒரு இடி போலத் தாக்கியது. இருந்தாலும் அமைதியாக உட்கார்ந்திருந்தேன்.



நர்ஸ் வந்து அழைக்க, டாக்டர் எழுந்து போனார். நான் யோசனையில் ஆழ்ந்தேன். என்னுடைய அமைதியற்ற மனநிலைக்கும் பெருமாளுக்கும் ஒரு அழுத்தமான தொடர்பு இருப்பதாகத் தோன்றியது. டாக்டர் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் காதுக்குள் மீண்டும் கேட்டது. அதுவும் அந்தக் கடைசி வாக்கியம், "இன்னும் உயிரோடத்தான இருக்காரு."

இன்று விடுமுறை. பெருமாள் அம்மா கூட, வேலைகளைக் குறைத்துக்கொண்டு கொஞ்சம் சந்தோஷமாக இருந்திருப்பார்கள். ஒச்சாத்தேவர், அவர் மாமியார் வீட்டுக்குப் போகணும்ன்னு சொல்லிக்கிட்டு இருந்தார். நானும் மதியத்திற்கு மேல் ஊருக்குச் செல்லலாம் என்றிருந்தேன். இப்படி எல்லோருடைய சந்தோஷத்தையும் பெருமாள் ஒரு நொடியில் ஒன்றுமில்லாமல் செய்து விட்டானே.

நர்ஸ் கொண்டு வந்து சில பேப்பர்களை டாக்டரின் மேஜையில் வைக்க, நான், அவளிடம் பெருமாளைப் பார்க்கலாமான்னு கேட்டேன். "அந்த சூசைடு கேஸா. போங்க... போங்க... போய் பாருங்க சார்"ன்னு சொல்லிவிட்டு விரைந்தாள்.

பெருமாளின் படுக்கையருகே போனேன். டிரிப் தடையின்றி இறங்கிக் கொண்டிருந்தது. அதில் மருந்து கலந்திருக்கிறதா எனத் தெரியவில்லை. ஆனால், ஆகச்சிறந்த, குறைந்தபட்ச நிவாரணி அதுதான் போல.

நான் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே, பெருமாளின் அம்மாவும் அங்கே வந்து, "சார் பொழைச்சிருவான்ல சார்" என்றார்.

"இருங்க டாக்டர், பாத்துக்கிட்டு இருக்கார். நீங்க வெளியே இருங்க, நான் இங்க இருக்கேன்" என்றேன்.

பெருமாளின் அம்மா வெளியே சென்றார். போகும் பொழுது எதிரே வந்த நர்ஸிடம்,"மூச்சு சத்தம் ஒரு மாதிரியிருக்கு, கொஞ்சம் பாரும்மா" என்றார்.

நர்ஸ் பார்த்து, பரிசோதித்து விட்டு, அவசரமாக வெளியேறிய சிறிது நேரத்தில், டாக்டர் வந்து பார்த்தார். அவசரம் அவசரமாக நர்ஸ், பெருமாளின் படுக்கையைச் சுற்றி மறைப்பு வைத்துவிட்டு, என்னை வெளியே இருக்கும்படி கேட்டுக்கொண்டார்.

நான் வெளியேறப் போகையில் நர்ஸிடம் டாக்டர், "இவரோட அம்மாகிட்ட பேப்பரில்ல கையெழுத்தெல்லாம் வாங்கிருங்க" என்றார். எனக்குக் கொஞ்சம் புரியத் தொடங்கியது.

அறைக்கு வெளியே பெருமாளின் அம்மா ஒரு மாதிரி நிதானமிழந்து அரற்றிக் கொண்டிருந்தார். எதுவும் புரியவில்லை.

கையெழுத்துப் போடும்பொழுது, தன் நிதானமிழந்து அரற்றிக் கொண்டிருக்க, நர்ஸ்,"அம்மா, கூத்தபெருமாள் உங்களுக்கு ஒரே பையனா" என கேட்டார். பெருமாளின் அம்மா தன் புடவைத் தலைப்பால் வாயை மூடிக்கொண்டு அழ ஆரம்பித்து நிறுத்தாமல் அழுது கொண்டிருந்தார்.

ஒரு நீண்ட மௌனத்திற்குப் பின், டாக்டர் என்னிடம் சொன்னதை, பெருமாளின் அம்மாவிடம், துண்டு துண்டாக சொல்லி முடிக்க, அந்த அம்மா தன் ஒட்டு மொத்த உடலும் குலுங்க அழுது கொண்டிருந்தார்.

பதினைந்து நாட்கள் கழித்து, பெருமாளை நினைத்துக்கொண்டே அலுவலகத்தில் உட்கார்ந்திருந்தேன். என் இயலாமையையும் விரக்தியையும் சகிக்க முடியவில்லை. வாய்விட்டு அழ வேண்டும் போலிருந்தது.

பெருமாளின் அம்மாவை நினைத்தேன். அழுது முடித்து ஓய்ந்து போய் அந்த ஆஸ்பத்திரி வராந்தாவில் எங்கோயோ பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த அவரது தோற்றம் நினைவில் வந்தது. நான் நாற்காலியில் சாய்ந்து கொண்டேன்.

பதினைந்து நாட்களாக மறந்திருந்த கைப்பையைத் திறக்க, அப்பாவின் கடிதமும் பெருமாளுக்காக அப்பா அனுப்பியிருந்த ஜாதகமும் கண்ணில்பட்டது. அப்படியே எடுத்து கிழித்து காலுக்கு அடியிலிருந்த குப்பைக் கூடையில் போட்டேன்.

குப்பைக் கூடைக்குள் இரண்டு கால்களையும் அகட்டிக்கொண்டு பெருமாள் நிற்கிற மாதிரி இருந்தது.

ஆ. ஆனந்தன் <anandan_50@yahoo.co.in>

# சிம்பொனியும் இந்திய சிற்றரசரும்

**ஹவி**

"அனைத்து இசைக் கருவிகளை காட்டிலும் மிகவும் அழகான இசைக் கருவி மனிதக் குரல்தான். ஆனால், அதுதான் இசைப்பதற்கு மிகவும் கடினமான ஒன்றாகும்" - ரிச்சர்ட் ஸ்ட்ராஸ்

ஜெர்மனியைச் சேர்ந்த சிம்பொனி இசைக் கலைஞர் ரிச்சர்ட் ஸ்ட்ராஸ். இவர் இயற்றிய கடைசி சிம்பொனியான 'கடைசி நான்கு பாடல்கள்', அவர் இறந்து எட்டு மாதங்களுக்கு பிறகு, லண்டனில் உள்ள ராயல் ஆல்பர்ட் ஹாலில் பில்ஹார்மோனியா இசைக்குழுவால் அரங்கேற்றப்பட்டது. புகழ்பெற்ற வில்ஹெம் ஃபர்வாங்லர் இக் கச்சேரியை வழி நடத்தினார். லண்டனில் அந்த இசை அரங்கேற்றம் நடைபெறுவதற்கான ஏற்பாடுகளை செய்தவர், இந்தியாவில் மைசூரை ஆண்ட கடைசி மன்னரும் சுதந்திரத்துக்கு பின்னர் சென்னையின் கவர்னராக இருந்தவருமான ஜெயசமராஜேந்திர வாடியார் என்பதுதான் இந்த கட்டுரையின் விசேஷம்.

ஜெயசமராஜேந்திர வாடியார் பற்றி பார்க்கும் முன்பு, ரிச்சர்ட் ஸ்ட்ராஸ் பற்றி இன்னும் கொஞ்சம் தெரிந்துகொள்ளலாம்.

சுமார் *150* ஆண்டுகளுக்கு முன்பு பிரபலமான ஹார்ன் இசைக் கலைஞராக இருந்த பிரான்ஸ்க்கு மகனாக ரிச்சர்ட் ஸ்ட்ராஸ் *1864*இல் மூனீச் நகரில் பிறந்தார். அவருக்கு இசையை கற்றுக் கொடுத்தவரும் அவரது தந்தையே. ஸ்ட்ராஸ் தனது முதல் இசைக் கோர்வையை எழுதிய போது அவருக்கு வயது 6 மட்டுமே. பின்னர், அவரது உறவினரும் பிரபல வயலின் ஆசிரியருமான பென்னோ வால்டர் என்பவரிடம் ராயல் இசைப் பள்ளியில் *1872*இல் இசைப் பாடங்களை ஸ்ட்ராஸ் கற்கத் தொடங்கினார்.



சிறுவயதிலேயே வாக்னர் இசையால் ஸ்ட்ராஸ் ஈர்க்கப்பட்டார். ஆனால், வாக்னர் இசையை கேட்க அவரது தந்தை அனுமதிக்கவில்லை. இருந்த போதிலும் ஸ்ட்ராஸின் இசை வளர்ச்சியில் வாக்னரின் தாக்கம் கணிசமான அளவு இருந்ததாகச் சொல்லப்படுகிறது.

தொடக்கத்தில் மிகவும் பழமைவாத கண்ணோட்டத்தோடு இசைக் கோர்வைகளை எழுதி வந்த ஸ்ட்ராஸ், வாக்னரின் உறவினரும் வயலின் கலைஞருமான அலெக்ஸாண்டர் ரிட்டரை சந்தித்ததும், அவரது எழுதும் முறையை ரிட்டர் மாற்றி அமைக்க உதவுகிறார். இதையடுத்து ஸ்ட்ராஸ் தனது பாணியை மாற்றத் தொடங்கி விடுகிறார்.

*1882*இல் முதன் முதலாக வியன்னாவில் டி மைனரில் தனது முதல் வயலின் கச்சேரியை நிகழ்த்துகிறார். அது வழமையான ரொமான்டிக் பாணியில் எழுதப்பட்ட போதிலும், மிகவும் புதுமையாகவும் துணிச்சலாகவும் அதை நிகழ்த்தி காட்டி, அதில் மொஸார்ட், பீத்தோவானுக்கான மரியாதையை குறிப்பிட்டார்.

தந்தையின் தாக்கம் காரணமாக ஹார்ன் இசைப்பதிலும் நிபுணராக ஆகி விடுகிறார். அவரது முதல் ஹார்ன் கச்சேரியில் Schumann, Mendelssohn பாதிப்பை காண முடிகிறது. இருந்தபோதிலும் இன்றைக்கும் நவீன ஹார்ன் இசைக் கோர்வைக்கான முக்கிய அம்சமாக அது விளங்கி வருகிறது என குறிப்பிடுகின்றனர்.

இசையல்லாத பிரதிகளான கவிதை, சிறுகதை, நாவல், நிலப்பரப்பு



போன்றவற்றை இசையில் இசைத்துக் காட்டக்கூடிய 'டோன் போயம்' என்ற சிம்பொனி வகையில் ஸ்ட்ராஸ் 1888இல் எழுதிய 'டான் குவிகாத்தே' அவரது முதிர்ந்த ஆளுமையை வெளிப்படுத்திய முதல் படைப்பாக திகழ்கிறது. அதன் பிறகு நீட்சேயின் கற்பனாதீத தத்துவார்த்த நாவலான 'ஜராஸ்துரா பேசுகிறேன்' படைப்பை அடிப்படையாக கொண்டு ஸ்ட்ராஸ் எழுதிய டோன் போயமான 'ஜராஸ்துரா இவ்வாறு பேசினார்' என்ற இசைக் கோர்வையை உருவாக்கினார். மிகவும் எழுச்சி மிக்க இசைக் கருப்பொருளான அந்த இசைக் கோர்வை ஸ்ட்ராஸூக்கு உலகம் முழுவதும் மிகுந்த கவனத்தை ஏற்படுத்தியது. அது இசை கலைஞர்கள் மத்தியில் மட்டுமின்றி பல்வேறு துறை சார்ந்தவர்களிடமிருந்தும் மிகுந்த வரவேற்பை பெற்றுக் கொடுத்தது.

அவரது இந்த இசைக் கோர்வையை 1968இல் பிரபல திரைப்பட இயக்குநர் ஸ்டான்லி குப்ரிக் தனது '2001: ஏ ஸ்பேஸ் ஓடிசி' திரைப்படத்துக்கு பயன்படுத்தினார். அதே போல பிபிசியும் அப்போலோ தரையிறங்கும் காட்சிக்கு இந்த இசையை பயன்படுத்தியது.

அதே போல ஆஸ்கார் ஓயில்டின் நாடகத்தை அடிப்படையாகக் கொண்டு, இசை ரீதியான மிகவும் சிக்கலான வடிவத்தைக் கொண்ட 'சலோம்' (1905) என்ற ஒபராவை உருவாக்கினார். இது அக்கால கட்டத்தில் மிகவும் பிரபலமாக விளங்கியது.

1930களின் தொடக்கத்தில், ஸ்ட்ராஸ், நாஜி கட்சியில் சேரவில்லை. இருந்த போதிலும், பயன்கருதி தொடக்கத்தில் அவர்களுக்கு ஒத்துழைப்பு அளித்தார். ஜெர்மனியின் அரசு இசை துறையின் தலைவராகவும் செயல்பட்டார். அவ்வாறு செயல்படுவது ஜெர்மனிய கலை, கலாச்சாரத்தை ஊக்குவிக்கும் என அவர் நம்பினார்.

ஆஸ்திரிய நாவலாசிரியர் Hofmannsthal மறைவுக்குப் பிறகு யூத நாடகாசிரியர் ஸ்டீபன் ஸ்வெக் உடன் சேர்ந்து காமிக் ஒபராவை உருவாக்கினார். இவர்களது கூட்டு செயல்பாட்டை நாஜிக்கள் அனுமதிக்கவில்லை. நான்கு மேடையேற்றத்துக்கு பிறகு அந்த நாடகத்துக்கு தடை விதிக்கப்பட்டது. இதனால் யூதர் அல்லாத ஜோசப் கிரிகோருடன் சேர்ந்து செயல்பட நிர்பந்திக்கப்பட்டார்.

எல்லாவற்றிற்கும் மேலாக குடும்பத் தலைவன் என்ற முறையில் வெகு விரைவிலேயே அவரது யூத மருமகள், பேரக் குழந்தைகளை பாதுகாக்க வேண்டிய அவரது உள்ளுணர்வின் காரணமாக அதற்கான செயல்பாடுகளில் இறங்கினார். தனது செல்வாக்கை பயன்படுத்தி அவர்களை வதைமுகாம்களுக்கு





ஜெயசமராஜேந்திர வாடியார் மனைவியுடன்

செல்லாமல் தடுக்க முயன்றார்.

இரண்டாம் உலகப் போரின் போது சில காலம் வியன்னாவில் கழித்தார். அங்கு வெளிநடவடிக்கைகளில் ஈடுபடாமல் இருந்தார். 1945இல் சுவிஸ் சென்று குடியேறினார். போருக்கு பின்னர் 1949இல் ஜெர்மனியில் உள்ள கார்மிஸ்ச்சுக்கு திரும்பினார். இரண்டாம் உலகப் போரின் முடிவில் ஸ்ட்ராஸ் அவரது பண்ணை வீட்டில் வைத்து அமெரிக்க வீரர்களால் கைது செய்யப்பட்டார். அப்போது ராணுவ அதிகாரியிடம் 'நான் ரிச்சர்ட் ஸ்ட்ராஸ், Rosenkavalier, Salome ஆகியவற்றை உருவாக்கிய இசைஞன்' என கூறினார். இசை ஆர்வமுள்ள அந்த ராணுவ அதிகாரி அதை அங்கீகரித்து அவரை மரியாதையாக நடத்த உத்தரவிட்டார்.

வாழ்நாள் முழுக்க இசைக்காகவே ஸ்ட்ராஸ் வாழ்ந்து 1949 செப்டம்பரில் தனது 85 ஆவது வயதில் இறந்தார். 20ஆம் நூற்றாண்டுக்கான மிகச் சிறந்த இசை மரபை அவர் உருவாக்கிச் சென்றுள்ளதாக அவரது விமர்சகர்களும் ரசிகர்களும் கொண்டாடுகின்றனர்.

தனது இறுதி காலத்தில் ஸ்ட்ராஸ் மிகச் சிறந்த 4 ஆக்கங்களை உருவாக்கினார். இசைக்கும் கவிதைக்குமான ஆழமான பிணைப்பை வெளிப்படுத்தக் கூடியதாக அவை விளங்கின. 'நான்கு கடைசி பாடல்கள்' என குறிப்பிடப்படும் அவற்றில் 'வசந்தம்', 'செப்டம்பர்', 'ஆழ்ந்து உறங்கும் போது', 'சூரிய அஸ்தமனத்தில்' ஆகிய கோர்வைகள் இருந்தது.

தனது மரணம் நெருங்குவதை அறிந்த 84 வயதான ஸ்ட்ராஸ், தனக்கு பிடித்தமான பிரபல நார்வேஜியன் ஒபரா பாடகியான Kirsten Malfrid Flagstad -க்கு கடிதம் ஒன்றை எழுதுகிறார். அதில், 'தற்போது லண்டனில் அச்சிடப்பட்டுக் கொண்டிருக்கும் நான்கு கடைசி பாடல்களை உங்களுக்கு அளிப்பதில் மகிழ்கிறேன். முதல் தரமான நடத்துனர், குழுவினரைக் கொண்டு அதன் முன்னோட்டம் நடைபெற வேண்டும் என விரும்புகிறேன்' என்று குறிப்பிட்டிருந்தார்.

அவரது ஆசை நிறைவேறாமலேயே கெடுவாய்ப்பாக விரைவில் அவர் இறந்து விடுகிறார். ஆனால், அவர் ஆசைப்பட்டதைப் போலவே அவர் இறந்த 8 மாதத்தில் அவரது கடைசி நான்கு பாடல்கள் லண்டன் பில்ஹார்மானிக் குழுவினரால் ராயல் ஆல்பர்ட் ஹாலில் வைத்து, புகழ் பெற்ற இசை நடத்துனரான வில்ஹெம் ஃபர்வாங்லர் மேற்பார்வையில் நிகழ்த்தப்படுகிறது. இதற்கான ஏற்பாடுகளை செய்தவர் முற்றிலும் அன்னியர் என்பதுதான் மிகவும் விசேசமானது. அவர் இந்தியாவில் மைசூரை ஆண்ட கடைசி மன்னரான ஜெயசமராஜேந்திர வாடியார்தான்.

ஸ்ட்ராஸ் கற்பனை செய்ததை காட்டிலும் மிகவும் சிறப்பாக அந்த நிகழ்ச்சியை நடத்தியதுடன் அதை இசைத்தட்டாக பதிவு செய்து வைத்தார் ஜெயசமராஜேந்திர வாடியார். தனது தனிப்பட்ட 20 ஆயிரத்துக்கும் மேற்பட்ட இசைத்தட்டு சேகரிப்புகளுடன் அதையும் சேர்த்துக் கொண்டார். இதை நிகழ்த்துவதற்காக மட்டும் 1950இல் சுமார் 5 ஆயிரம் டாலர், அதாவது இந்திய மதிப்பில் அப்போதே சுமார் 4 லட்சம் ரூபாய் செலவிட்டு அதகளப்படுத்தினார். இதன்மூலம் மேற்கத்திய செவ்வியல் இசை வரலாற்றில் அழிக்க முடியாத தடத்தை பதித்தார், ஜெயமசராஜேந்திர வாடியார்.

ஸ்ட்ராஸூக்கும் வாடியாருக்கும் இடையில் எத்தனையோ வேறுபாடுகள் இருந்த போதிலும் போரினால், வன்முறையால், அழிவுகளால் ஏற்பட்ட

பாதிப்புகளின் பின்னணியை இருவரும் ஒரே மாதிரியாக எதிர்கொண்டனர். இசையின் காரணமாக இருவரும் அவற்றிலிருந்து வெளியேறி ஆறுதலாக இருக்க முடிந்தது.

இந்தியா சுதந்திரம் அடைந்த வேளையில் சமஸ்தானங்கள் கலைக்கப்பட்டதில் மைசூர் அரச பரம்பரையும் தப்பவில்லை. அதனால் இறுதி மன்னரான ஜெயசமராஜேந்திர வாடியார் மிகப் பெரிய இழப்புகளுக்கு உள்ளானார். அதே போல நாஜிக்கள் மற்றும் போர்களின் காரணமாக நடுநிலை வகித்த சுவிட்சர்லாந்துக்கு ஸ்ட்ராஸ் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது. இருப்பினும் வரலாற்று, அரசியல் பின்னணிகளுக்கு அப்பால் இசையின் மீதான ஆர்வம் இருவரையும் ஒன்றிணைத்தது.

மைசூரின் கடைசி மகாராஜா என்ற அடையாளம் 31 வயதிலேயே ஜெயசமராஜேந்திராவுக்கு இருந்த போதிலும், அவர் அந்த அடையாளத்தோடு மட்டும் ஒடுங்கி விடவில்லை. அவர் விதிவிலக்காக ஐரோப்பிய பாரம்பரிய இசை கலைஞராகவும் அதன் புரவலராகவும் விளங்கினார்.



இந்த பின்னணி தான் அவரை 1950களில் ஸ்ட்ராஸின் கடைசி நான்கு பாடல்களை நிகழ்த்தவும் பதிவு செய்யவும் காரணமாக அமைந்தது.

மைசூர் மகாராஜாவாக இருந்த அவரது தந்தை கண்டிரவ நரசிம்மராஜ வாடியார், அவரது மாமா நான்காவது கிருஷ்ணராஜ வாடியார் ஆகியோர் மறைவுக்கு பிறகு, தனது 21 வயதில் 1940இல் ஜெயசமராஜேந்திர வாடியார் பட்டம் தரித்தார்.

இருந்த போதிலும் அவரது ஆர்வமெல்லாம் அரசவையை நிர்வகிப்பதைக் காட்டிலும் இசையின் மீதே மிகுந்த நாட்டம் கொண்டதாக இருந்தது.

அவரது இசை ஆர்வத்துக்கு மைசூரில் உள்ள குட் ஷெப்பர்ட் பள்ளியின் சிஸ்டர் இக்னேஷியஸ் மூலம் பியானோ கற்றுக் கொள்ள வாய்ப்பு கிடைத்தது. பியானோவில் தனது திறமையை வளர்த்துக்கொண்ட அவர், லண்டனில் உள்ள Guildhall School of Musicஇல் அங்கீகாரம் பெற்று, Trinity College of Musicஇல் மிகச் சிறந்த கலைஞர் என்ற பட்டத்தையும் வென்றார். மிகச் சிறந்த மேற்கத்திய பியானோ இசைக் கலைஞராக திகழ்ந்த வாடியார் 100க்கும் மேற்பட்ட கர்நாடக கீர்த்தனைகளையும் இயற்றியுள்ளார்.

ஸ்ட்ராஸின் கடைசி நான்கு பாடல்கள் லண்டனில் நிகழ்த்தப்பட்டது வெறும் தற்செயலான ஒன்றல்ல. அது ஜெயசமராஜேந்திர வாடியாரின் தீவிரமான இசை ஆர்வம் மற்றும் செல்வாக்கின் விளைவுமாகும்.

1948இல் பில்ஹார்மோனியா கன்சர்ட்டோ சொசைட்டியின் தலைவராகவும் ஜெயசமராஜேந்திர வாடியார் திகழ்ந்தார். அதே போல ஸ்ட்ராஸ் மட்டுமே வாடியாரின் ஆதரவைப் பெற்ற இசைஞர் அல்ல. அதன் அரங்கேற்றத்துக்கு சில ஆண்டுகளுக்கு முன்பு, தன்னை மாணவராக ஏற்றுக்கொள்வார் என கருதிய வாடியார், புகழ்பெற்ற பியானோ இசை கலைஞரான செர்கய் ரச்மானினோஃப்பை சுவிஸில் சந்தித்தார். அப்போதுதான் அதிகம் அறியப்படாத ரஷ்ய இசைக் கலைஞரான நிகோலாய் மெட்னரின் இசையை கேட்கும் வாய்ப்பு வாடியாருக்கு ஏற்பட்டது. அப்போது நிகோலாயின் தொடர் இசை முயற்சிகளுக்கு நிதியளிக்க முடிவு செய்து மெட்னர் சொசைட்டியை 1949இல் நிறுவினார். இருந்த போதிலும் நிகோலாய் மெட்னரும் வாடியாரும் இறுதி வரை சந்திக்கவேயில்லை.

ஆனாலும், இந்த பங்களிப்பின் காரணமாக நிகோலாய் தனது மூன்றாவது பியானோ கன்சர்ட்டோவை மைசூர் மகாராஜாவுக்கு அர்ப்பணித்து தனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டார். இது தொடர்பான குறிப்புகளை இசை விமர்சகர் பிரெட் ஸ்மித் எழுத்துகளில் காண முடியும். சுதந்திரத்துக்கு பின்பு வாடியார் மைசூர் மற்றும் சென்னையின் கவர்னராகவும் நியமிக்கப்பட்டார்.

வாடியாரின் நிதி மானியம், மிகவும் கடினமான நிதி நெருக்கடி காலகட்டத்தில் தவித்து வந்த பில்ஹார்மோனியா ஆர்கெஸ்ட்ராவை தொடர்ந்து நடத்துவதற்கு உதவிகரமாக இருந்து வந்தது. ஆண்டு தோறும் £10,000 தருவதாக வாக்குறுதி அளிக்கப்பட்டிருந்த நிலையில், அரசியல் காரணங்களால் அதை தொடர்ந்து அளிக்க முடியவில்லை. பின்னர் அது £5,000 ஆக குறைக்கப்பட்டது. இரண்டு ஆண்டுகளுக்கு பின்னர் அதுவும் முற்றிலும் நிறுத்தப்பட்டது. நாடு விடுதலை அடைந்ததைத் தொடர்ந்து மைசூர் சமஸ்தானம் அரசியல் ரீதியாகவோ நிர்வாக ரீதியாகவோ சுதந்திரமாக முடிவெடுக்க முடியாத நிலைக்கு தள்ளப்பட்டதால், இந்த சிக்கல் தவிர்க்க முடியாததாக ஆகியது.

இன்றைக்கும் மும்பையில் உள்ள சிம்பொனி இசை சொசைட்டியின் புரவலர்களாக மைசூர் மகாராஜாவின் குடும்பத்தினரே இருந்து வருவதுடன், அவரது சகோதரி ஜெயந்தி தேவியும் இசைக் கலைஞராகவும் நிர்வாகியாகவும் செயல்பட்டு வருகிறார்.

வாடியார் தனது 55ஆவது வயதில் 1974இல் காலமானார்.

ஹரி <ighari2008@gmail.com>

# சாமி கிரீஷ் கவிதைகள்

1.
## பூமியின் தாகம்

நதியின் தாகத்தை நினைத்திருக்கையில்
முள்ளெனத் தைக்கிறது
மீனின் தாகம்
மீனின் தாக நினைவை துண்டுகளாய்
வியர்வை வழிய வெட்டியெறிந்தபின் துளிர்க்கிறது
நீரின் தாகம்
நீரின் தாகத்தில் நீந்துகையில் தட்டுப்படுகிறது மணலின் தாகம்
மணலின் தாகத்தை தோண்டுகையில்
ஊற்றெடுக்கிறது பூமியின் தாகம்
பூமியின் தாகத்தை
புரிந்து கொண்டதில்
பற்றியெரிகிறது அன்பின் தாகம்



2.
## துயரங்களின் விழிப்பு

நடுச்சாலையில் நிற்கும் நாய்க்குட்டிமீது படர்கிறது
வாகன வெளிச்சம்
யாரையேனும்
தூக்கிக்கொண்டுப் போக வேண்டி
அருகாமை இருளில்
மறைந்து நிற்கிறது
தாய் நாய்
ஒரு துயரத்தின்மீது
விழும் வெளிச்சம்
இருளிலேயே கிடக்கும்
மற்ற துயரங்களிடமும்
பிரகாசங்களை கொண்டுவந்து விடுகிறது
இருளில் பிரகாசிப்பதுதான்
துயரங்களின் விதிப்பா
என்பதை
அத்தனை வெளிச்சமாய்
சொல்ல முடிவதில்லை
வெளிச்சமென்பதை
துயரின் விழிப்பென்று
அடர் இருளை கீறியும் எழுதலாம்

**சாமி கிரிஷ்**<samykrish90@gmail.com>

# அந்தோனியோ நெக்ரியும் இந்திய சிறைவாசிகளும்

**ரவிக்குமார்**

இத்தாலி நாட்டைச் சேர்ந்த சிந்தனையாளர் அந்தோனியோ நெக்ரியோடு நிகழ்த்தப்பட்ட உரையாடல் நூல் 'Negri on Negri'.

நெக்ரி தமிழ்நாட்டில் பேசப்படாத ஒரு சிந்தனையாளர். ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன்பு கவிஞர் கே. சச்சிதானந்தனை நான் பேட்டி கண்டபோது அவர்தான் நெக்ரியின் பெயரைக் குறிப்பிடார். அதன்பிறகே நான் நெக்ரியின் நூல்களை வாசிக்கத் தொடங்கினேன்.

1933இல் இத்தாலியில் பிறந்த நெக்ரியின் வாழ்க்கை சாகசங்கள் நிறைந்தது. அவர் பேராசிரியராக இருந்தபோது இத்தாலியில் கலக நடவடிக்கைகளில் ஈடுபட்ட 'ரெவல்யூஷனரி பிரிகேட்' என்ற தீவிர இடதுசாரி அமைப்புடன் தவறாகத் தொடர்புபடுத்தப்பட்டு 1979இல் கைது செய்யப்பட்டார். அவரைப்போல் சுமார் 100 அறிவுஜீவிகளை அதே குற்றச்சாட்டின் கீழ் இத்தாலிய அரசு கைது செய்தது.

பொய்யான குற்றச்சாட்டின் கீழ் கைது செய்யப்பட்டு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்ட நெக்ரி, சிறைப்படுத்தப்பட்டு 4 ஆண்டுகளுக்குப் பின் சிறையில் இருந்தபடியேதேர்தலில்போட்டியிட்டு இத்தாலி நாடாளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், அவரை மீண்டும் சிறையில் அடைக்கும் முயற்சிகள் நடப்பதை அறிந்து அவர் அங்கிருந்துதப்பித்துபிரான்ஸ்நாட்டில் தஞ்சம் புகுந்தார். நெக்ரியின் மீதான இத்தாலி அரசின் அடக்குமுறையை பிரான்ஸ் நாட்டுச் சிந்தனையாளர்கள் எல்லோருமே கண்டித்தனர். எனினும் இத்தாலி அரசு மனமிரங்கவில்லை.

பிரான்ஸில் 14 ஆண்டுகள் பேராசிரியராகப் பணிபுரிந்தார். அந்த காலகட்டத்தில் அவர் எழுதிய நூல்கள், பிரான்ஸ் நாட்டின் மிக முக்கியமான சிந்தனையாளர்களாகக் கருதப்படும் மிஷல் ஃபூக்கோ, அல்தூஸர், தெலூஸ் ஆகியோரின்



வரிசையில் வைத்து அவரைப் பார்க்கும் நிலையை ஏற்படுத்தின. இதனிடையில் இத்தாலி அரசு அவரது தண்டனையை 30 ஆண்டுகள் என்பதிலிருந்து 13 ஆண்டுகளாகக் குறைத்தது. அதனால், 1997இல் மீண்டும் இத்தாலியில் நடத்தப்பட்ட நீதிமன்ற விசாரணையில் ஆஜராகி எஞ்சிய தண்டனை காலத்தை சிறையில் கழித்தார். அவர் சிறைக்குள் இருந்தபோதுதான் Empire உள்ளிட்ட அவரது முக்கியமான பல நூல்கள் வெளிவந்தன.

'நெக்ரி ஆன் நெக்ரி' நூலில் தனது சிறை அனுபவங்களை ஆங்காங்கே அவர் குறிப்பிட்டு இருக்கிறார். 'சிறைக்குள் இருக்கிற ஒரு மனிதன் ஆழமான பார்வையைப் பெறுவதிலிருந்து தடுக்கப்படுகிறான். மதில் சுவர் அவனது பார்வையின் எல்லையைத் தீர்மானிக்கிறது. சிறைக்குள் இருப்பவர் வானத்தோடு கொள்கிற உறவின் மூலமே தனது பார்வையை கட்டவிழ்த்துக் கொள்கிறார். சிறைச்சாலை மீது இருக்கும் வானத்தில் எப்போதோ பறந்து செல்லும் ஒரு பறவை அல்லது ஒரு விமானம் அவை கிளர்த்தும் உணர்வு அலாதியானது' என்கிறார் நெக்ரி.

நெக்ரியின் சிறை அனுபவங்களைப் படித்தபோது நமது நாட்டில் இருக்கும் சிறைகளைப் பற்றிய நினைவு நெஞ்சில் சுழன்றது. கொரோனா காலத்தில் சிறைவாசிகளைப் பிணையில் விடுவிக்கும்படி உச்சநீதிமன்றம் தொடர்ந்து அழுத்தம் தந்ததும், ஆணைகளைப் பிறப்பித்ததும் மிகப்பெரிய ஆறுதல்.

சிறைவாசிகளைப் பற்றி நாம் பெரிதாகக் கவலைப்படுவதில்லை. எத்தனையோ அமைப்புகள் இருக்கும் இந்த நாட்டில் சிறைவாசிகளின் உரிமைகள் தொடர்பாகப் பேசுவதற்கு ஒரு வலுவான அமைப்பு இல்லை.

இந்த நாடாளுமன்ற கூட்டத்தொடரில் நான் ஒரு தனிநபர் சட்ட மசோதாவைத் தாக்கல் செய்து இருக்கிறேன். Representation of Peoples (Amendment Act), 2024 என்ற அந்த மசோதா சிறைவாசிகளுக்கும் வாக்குரிமையை அளிப்பதற்கானது. மக்கள் பிரதிநிதித்துவ சட்டத்தின் பிரிவு 62(5) தண்டனை சிறைவாசிகளுக்கும் விசாரணை கைதிகளுக்கும் வாக்குரிமையை மறுக்கிறது. இது மிகப்பெரிய அநீதியாகும். இந்தியாவில் உள்ள 1350 சிறைகளில் அடைபட்டிருக்கும் சிறைவாசிகளில் 70% பேர் விசாரணைக் கைதிகள் ஆவர். ஒருவருக்குத் தண்டனை கொடுக்கப்படுவதற்கு முன்பே அவரது வாக்குரிமையைப் பறிப்பது அடிப்படை உரிமைக்கு முரணானது.

உலகின் பெரும்பாலான நாடுகளில் சிறைவாசிகளுக்கு வாக்களிக்கும் உரிமை இருக்கிறது. அதுபோல நமது நாட்டிலும் அந்த உரிமை அளிக்கப்பட வேண்டும். அதற்காகவே இந்த தனிநபர் சட்ட மசோதாவை நான் அறிமுகப்படுத்தி இருக்கிறேன். அது எப்போது விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும் என்பது தெரியாது. ஆனால், என்றாவது ஒருநாள் இந்தியாவிலும் சிறைவாசிகள் வாக்குரிமையைப் பெறலாம். அதற்கான துவக்கப் புள்ளியாக இந்த தனிநபர் மசோதா அமையும் என்று நான் நம்புகிறேன்.

ரவிக்குமார்
<adheedhan@gmail.com>

# தெரிந்ததும் தெரியாததும்

**பாவண்ணன்**

கடந்த மாத இறுதியில் என் மனைவியுடைய தங்கை விடுமுறையில் குடும்பத்தோடு வந்திருந்தார். அவர்களுடைய மகன் கணிப்பொறித்துறையில் பணிபுரிபவன். அவனுக்கு விடுமுறை அமையும் காலமே அவர்களுக்கும் விடுமுறைக் காலம். எங்காவது மூன்று நாட்கள் சேர்ந்து தங்குவதுபோலத் திட்டமிடச் சொன்னார்கள். நீண்ட நேர உரையாடலுக்குப் பிறகு குடகுமலை அடிவாரத்தில் உள்ள மடிக்கேரிக்குச் சென்று தங்கிவிட்டு வரலாம் என்று முடிவெடுத்தோம்.

காலையிலேயே பெங்களூரிலிருந்து புறப்பட்டுவிட்டோம். பொழுது சாயும் அந்தி வேளையில் மடிக்கேரியை அடைந்தால் போதும் என்று நினைத்து, வழியில் தென்பட்ட சில இடங்களையும் பார்த்தபடி சென்றோம். ஸ்ரீரங்கப்பட்டணத்திலும் மைசூரிலும் சிறிது நேரம் செலவழித்துவிட்டு குஷால்நகர் வழியாக எங்கள் பயணம் தொடர்ந்தது.

குஷால்நகருக்கும் மடிக்கேரிக்கும் இடையில் பைலகுப்பெ இருக்கிறது. அந்த இடத்தில்தான் திபெத்தியர்களின் குடியிருப்புக்காக அறுபதுகளில் மூவாயிரம் ஏக்கர் நிலப்பரப்பை அரசு ஒதுக்கிக் கொடுத்திருந்தது. அரை நூற்றாண்டில் அவர்கள் அந்த இடத்தை வளம் பொருந்தியதாக மாற்றி வாழ்ந்து வருகிறார்கள். தத்தம் பிரிவுக்கு உகந்த வகையில் மடாலயங்களை ஆங்காங்கே உருவாக்கியிருக்கிறார்கள். அவற்றில் தங்கக்கோயில் என்று அழைக்கப்படும் நம்ட்ரொலிங் மடாலயம் விரிவான நிலப்பரப்பில் அழகான கட்டுமானத்தோடு அமைந்துள்ளது. அந்த மடாலயத்தில் உள்ள அறுபதடி உயரமான புத்தர் சிலை தங்கமுலாம் பூசப்பட்டது. அச்சிலைக்கு வலதுபுறத்தில் அமிதாயுஸ் சிலையும் இடதுபுறத்தில் பத்மசாம்பவரின் சிலையும் அமைந்துள்ளன. அவையும் தங்கமுலாம் பூசப்பட்டவை. மின்சார வெளிச்சத்தில் அவை பளிச்சிட்டு கண்களைக் கவர்கின்றன.



மடாலயத்தின் உட்புறச்சுவர்களிலும் வெளிப்புறச்சுவர்களிலும் ஏராளமான ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன. அவற்றைப் பார்த்தபோது ஜாதகக் கதைகளின் கருக்களாக இருக்கக்கூடும் என்ற எண்ணமே முதலில் எழுந்தது. எல்லாமே குகை ஓவியங்களின் சாயலில் இருந்தன. அவை பிரதியெடுக்கப்பட்ட ஓவியங்களா அல்லது கற்பனைச் செறிவோடு புதிதாகத் தீட்டப்பட்டவையா என்பதை என்னால் பிரித்தறிய முடியவில்லை. அந்த ஓவியங்களை நின்று நின்று ரசித்தபடி பார்த்துக்கொண்டே சுற்றி வந்ததில் ஏறத்தாழ இரண்டு மணி நேரம் சென்றதே தெரியவில்லை.

மடலாயத்தின் வெளிச்சுவரில் நான் பார்த்த ஓர் ஓவியம் என் நெஞ்சில் ஆழமாகப் பதிந்துவிட்டது. காட்டைப் பின்னணியாகக் கொண்டு தீட்டப்பட்ட அந்த ஓவியத்தில் உயரமானதொரு மரத்தின் கீழே ஒரு யானை நின்றிருக்கிறது. அதன் தும்பிக்கைக்கு எட்டாத உயரத்தில் கிளைமுழுக்க ஏராளமான பழங்கள் அடர்ந்து தொங்குகின்றன. யானையின் முதுகில் ஒரு குரங்கு. அதன் முதுகில் ஒரு முயல். அதன் முதுகில் ஒரு பறவை உள்ளது. யானை, குரங்கு, முயல், பறவை எல்லோரிடமும் ஒரு பழம் உள்ளது. பழத்தை யார் பறித்து யாரிடம் கொடுத்தார்கள் என்பது தெரியவில்லை. அந்தச் சித்திரம் என்னை அசையவிடாமல் அப்படியே நிறுத்திவிட்டது.

என் மனத்தில் ஏதேதோ சிந்தனைகள் தோன்றி மறையத் தொடங்கின. ஒரு மரத்தில் உள்ள பழங்களைச் சொந்தம் கொண்டாடி ஒருவரே புசிக்காமல் எல்லா விலங்குகளும் சேர்ந்து புசித்துப் பசியாறுகின்றன என ஒரு கணம் தோன்றியது. ஒரு கனியை ஒரு விலங்கு பறிக்க, பிற விலங்குகள் வேறுபாடு பாராமல் துணை நிற்கின்றன என்று இன்னொரு கணம் தோன்றியது. அந்தக் காட்சிக்கான பொருளை எனக்குப் பிடித்தவகையில் பல்வேறு விதமாக உருவாக்கி மகிழ்ந்தேன். என்



வாழ்வில் மகத்தான கணம் அது.

மடிக்கேரி பயணத்தை முடித்துக்கொண்டு திரும்பியதும் விட்டல்ராவைச் சந்தித்தபோது, அந்த மடாலயத்தில் பார்த்த ஓவியத்தைப் பற்றி அவரிடம் தெரிவித்தேன். வெவ்வேறு கோணங்களில் நான் எடுத்திருந்த படங்களையும் காட்டினேன். "ரொம்ப அபூர்வமான ஓவியம் பாவண்ணன்" என்று அவர் மகிழ்ச்சியோடு சொன்னார். தொடர்ந்து "கலைதான் மனிதனின் மகத்தான கண்டுபிடிப்பு பாவண்ணன். ஓவியம், சிற்பம், இசை, இலக்கியம், நாடகம் எந்தக் கலையாக இருந்தாலும் சரி, எல்லாமே மகத்தானவை. அது ஒரு சமூகத்தின் அடையாளம்" என்று குறிப்பிட்டார்.

விட்டல்ராவ் அந்த ஓவியத்தையே பார்த்துக்கொண்டிருந்தார். "இது எந்தக் காலத்து ஓவியமா இருக்கும் சார்?" என்றொரு கேள்வியை முன்வைத்து நான் ஓர் உரையாடலைத் தொடங்கிவைத்தேன்.

"அநேகமா திபெத் ஓவியமாக இருக்கத்தான் வாய்ப்புகள் அதிகமா இருக்குது. அதை வழிவழியா பார்த்த ஓவியர்கள் பைலகுப்பெ மடாலயத்திலயும் தீட்டி வச்சிருக்காங்க."

"இந்த மாதிரியான ஓவியங்களின் மூல ஓவியத்தை யார் தீட்டினாங்கன்னு தெரிஞ்சிக்க எந்தக் குறிப்பும் கிடைக்காதா?" என்று ஆவலோடு கேட்டேன்.

அவர் புன்னகைத்தபடி "இல்லை" என்பதுபோலத் தலையசைத்தார்.

"ஆதிகாலத்துல அப்படி ஒரு பழக்கமே இல்லை. ஓவியமும் சிற்பமும்தான் ஆதிமனிதர்களுடைய கலைவெளிப்பாடுகள். குகைச்சுவர்கள்ல முதலில் ஓவியம் தீட்டினாங்க. அப்புறம் கோவில்னு ஒரு அமைப்பு உருவானபோது, அங்கயும் ஓவியங்கள தீட்டி வச்சாங்க. சங்க இலக்கியத்துல இந்தப் பாட்டு இன்னார் எழுதியதுன்னு சொல்ற மாதிரி குகை ஓவியங்கள்ல எதையும் சொல்லமுடியாது. அப்படி ஒரு பழக்கமே அப்ப இல்லாம இருந்திருக்குது. அது எல்லாத்துக்குமே அரசர்களுடைய காலகட்டத்தை அடையாளமா வச்சிட்டாங்க. மரபான ஓவியங்களுக்கு ஓவியர்களுடைய பெயரே கிடையாது. எல்லாமே ஒரு குறிப்பிட்ட காலகட்டத்துக்குச் சொந்தமானதா மாறிட்டுது. பிம்பீத்கா பாறை ஓவியங்கள், அஜந்தா, எல்லோரோ குகை ஓவியங்கள், சித்தன்னவாசல் ஓவியங்கள் எல்லாத்துக்கும் அந்த ஓவியங்கள் தீட்டப்பட்ட இடத்துடையை பெயரே அமைஞ் சிபோச்சி. வரலாற்றில எத்தனையோ ஓவியர்களுடைய பெயர்கள் அப்படியே காத்தோடு காத்தா கரைஞ் சிபோச்சி. அதிர்ஷ்டவசமா அந்த ஓவியங்கள் மட்டும் காலத்துடைய சாட்சியா அப்படியே நிக்குது..."

விட்டல்ராவ் சொல்லச்சொல்ல என் மனத்தில் ஒரு சந்தேகம் திரண்டு நின்றது. முதலில் கேட்கலாமா வேண்டாமா என்று தயக்கமிருந்தது. ஆயினும் தயங்கிக்கொண்டே இருந்தால் தெரிந்துகொள்ள வாய்ப்பே இல்லாமல் போய்விடும் என்ற எண்ணத்தில் அவர் பேசி முடிக்கும் வரைக்கும் காத்திருந்து என் கேள்வியை முன்வைத்தேன்.

"அந்தக் காலத்துல எழுத்துப்பயிற்சி, தொழில்பயிற்சிக்கு குருகுலம் இருந்த மாதிரி ஓவியப்பயிற்சிக்கும் குருகுலம் இருந்திருக்குமா?"

இல்லை என்பதற்கு அடையாளமாக அவர் தலையை அசைத்தார். 'த்ச்' என்று நாக்கு சப்புக்கொட்டியபடி உதட்டைப்பிதுக்கினார். "அப்படி ஒரு அமைப்பு இருந்ததா எங்கயும் ஒரு தடயமும் இல்லை. ஓவியர்கள் அப்படியே தான்தோன்றிதா அபூர்வமா எங்க எங்கயோ வாழ்ந்திருக்காங்க. ஆசையா கத்துக்கிடணும்னு வந்த ஒன்னு ரெண்டு பேருக்கு சொல்லிக் கொடுத்திருக்கலாம். ஆனா குருகுலம் மாதிரி இருந்திருக்க வாய்ப்பில்லைன்னுதான் எனக்குத் தோணுது" என்றார். சில கணங்களுக்குப் பிறகும் "ஓவியத்தை மட்டுமில்லாம, சிற்பம், இசை எல்லாத்தையும் கத்துக் கொடுக்கிற ஒரு அமைப்புபோல முதன்முதலா ஒரு ஸ்கூல உருவாக்கியது வெள்ளைக்காரன் ஆட்சியிலதான். நமக்கு புடிக்குதோ புடிக்கலையோ, அவன்தான் அதை ஆரம்பிச்சி வச்சான்" என்றார்.

"எங்க ஆரம்பிச்சாங்க?"

"பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டு காலத்துல வெள்ளைக்காரங்களுடைய முக்கியமான மையமா இருந்தது கல்கத்தாதான். அதுக்குப் பிறகுதான் சென்னை பிரபலமாச்சி. கல்கத்தாவுலதான் முதல் கலைப்பள்ளியைத் தொடங்கினாங்க. அந்தக் கலைப்பள்ளியில சொல்லிக் கொடுத்ததெல்லாம் ஐரோப்பிய ஓவியக் கலை பத்திய விஷயம்தான். ஆனா அங்க கத்துகிட்ட இந்திய ஓவியர்கள் அந்த விஷயங்களை உள்வாங்கி தீட்டிய ஓவியங்களுக்கு ஒரு இந்தியத்தன்மை தானாகவே உருவாச்சி."

"இலக்கியத்துலயும் அதே விஷயம்தான நடந்தது. ஐரோப்பிய நாவல் வடிவத்துல இந்திய வாழ்க்கையை முன்வச்சி, இந்தியப் பிரச்சினையை எழுதத் தொடங்கியதுமே இந்திய நாவல்னு ஒன்னு உருவாயிடுச்சி."

"ஆமாம். ஓவியத்துலயும் அதே முறையிலதான் மாற்றம் நடந்தது. அந்த மாற்றத்தை அந்தப் பள்ளிகளை நடத்திய ஆங்கில அரசாங்கம் கவனிச்சிகிட்டுதான் இருந்தது. ஆனா அந்த மாற்றத்தை அந்த பள்ளியால நிறுத்த முடியலை. வங்காளத்துல வாழ்ந்த ரவீந்திரநாத் தாகூர், அபனீந்திர தாகூர் எல்லாரும் அந்தக் கலைப்பள்ளியில படிச்சவங்கதான். தன்னுடைய ஓவியத்திறமையை அங்கதான் அவுங்க வளர்த்துகிட்டாங்க. அந்தக் காலத்துல அபனீந்திர தாகூர் ரொம்ப ரொம்ப முக்கியமான ஒரு ஓவியத்தைத் தீட்டி எல்லாரயும் திரும்பிப் பார்க்க வச்சாரு."

"அது என்ன ஓவியம்?"

"பாரதமாதான்னு ஒரு ஓவியம். ரொம்ப முக்கியமான ஓவியம். மரபு ஓவிய முறையில புராணக்கதைகளை ஓவியமா தீட்டறதும் கடவுள் உருவங்களைத் தீட்டறதும் வாடிக்கையான விஷயம். ஓவியம்னு சொன்னாலே புராணம், தெய்வம்னு இருந்த காலம் அது. அபனீந்திர தாகூர் ஒரு அடி முன்னால போய் அந்த வடிவத்தை அப்படியே தக்கவச்சிகிட்டு, உள்ளடக்கத்தை மாத்தி புதுசா ஒன்னை உருவாக்கினாரு. இப்ப காளி உருவம் இருக்குதில்லையா? அந்த உருவத்தை அப்படியே தக்கவச்சிகிட்டு அதை கொஞ்சம் கொஞ்சமா பாரதமாதாவா மாத்திட்டாரு. அதனுடைய இன்னொரு வடிவத்தைத்தான் பல வருஷங்கள் கழிச்சி பாரதியார் தன்னுடைய இந்தியா பத்திரிகையில கருத்துப்படமா வெளியிட்டாரு. இப்ப பாரதமாதா ஓவியம், அபனீந்திர தாகூர் ரெண்டயும் வேறுபடுத்திப் பார்க்கமுடியாது. ஓர் ஓவியனுடைய பெயரோடு அவனுடைய ஓவியத்தை அடையாளப்படுத்துகிற மரபும் வரலாறும் அப்பதான் தொடங்கியிருக்கணும்."

"ராஜாரவிவர்மாவும் அந்தக் காலகட்டத்தைச் சேர்ந்த ஓவியர்தானே?" என்று எனக்கு எழுந்த சந்தேகத்தைக் கேட்டேன்.




”ஆமாம். அபனீந்திர தாகூரும் ரவிவர்மாவும் ஒரே காலகட்டத்தைச் சேர்ந்தவங்கதான். தாகூர் கலைப்பள்ளியில படிச்சாரு. ரவிவர்மா எந்தக் கலைப்பள்ளியிலயும் படிக்கலை. மதுரையில அப்ப ராமசாமி நாயுடு மாதிரியான பெரிய பெரிய ஓவியர்கள் வாழ்ந்துவந்தாங்க. ரவிவர்மா அவர்கிட்ட சேர்ந்து ஓவிய நுணுக்கங்களையெல்லாம் கத்துகிட்டாரு. திருவிதாங்கூர் அரண்மனையுடைய ஆதரவு அவருக்கு பரிபூரணமா கெடைச்சிது. அதனால பல சாதனைகளை அவரால நிகழ்த்த முடிஞ்சது.”

“ஓவியத்தைப் பொறுத்தவரையில, அது ஒரு எழுச்சியான காலகட்டம்னு சொல்லுங்க.”

“ஆமாம். அதுல சந்தேகமே இல்லை. அதை ஒரு தொடக்கமா கொண்டு இந்தியா முழுக்க பல பாகங்கள்ல நல்ல நல்ல ஓவியர்கள் உருவானாங்க. உலக அளவுல முக்கியமான ஓவியர்களான வான்கோ, பிகாசோ எல்லாருமே அதே காலகட்டத்துலதான் உருவானாங்க. புராண உருவங்களுக்குப் பதிலாக சாதாரண மக்களின் உருவத் தோற்றங்களையும் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் ஓவியமா தீட்டினாங்க. வான்கோ கோதுமை வயல்ல வேலை செய்யற பெண்கள், சிறுமிகளை ஓவியமா தீட்டினாருன்னா, நம்ம இந்திய ஓவியர்கள் பால் விற்கிற பெண், நாடோடி, வளையல் விற்கிற வியாபாரின்னு வரைய ஆரம்பிச்சாங்க. இந்தியாவில ஓவியக் கலைஞர்களுடைய காலம் கொஞ்சம் கொஞ்சமா உருவாக ஆரம்பிச்சிடுது. தெய்வங்கள், ஆளுமைகள் இருந்த திரைச்சீலையில முதன்முதலா ஒரு பொதுமகனுடைய முகம் இடம் பெற ஆரம்பிச்சிது. இது ரொம்ப முக்கியமான திருப்புமுனை.”

“கல்கத்தாவிலிருந்துதான் மற்ற நகரங்களுக்கு பரவியதா?”

“கல்கத்தாதான் முதல் ஸ்கூல். அதுக்கப்புறம் பம்பாய் ஸ்கூல். இந்தியா மாதிரியான நாடுகள்ல பொதுமனிதன்ங்கறவனுக்குஎந்த தனி அடையாளமும் இல்லை. அவன் எப்பவும் கூட்டத்திலே ஒருவன். முகமே இல்லாத மனிதனுக்கு ஒரு முகத்தை ஏன் கொடுக்கணும்ங்கறது முக்கியமான கேள்வியா எழுந்தது. முகமில்லாத மனிதன், முகம் சிதைக்கப்பட்ட மனிதன்னு வெவ்வேறு விதமான ஓவியங்கள தீட்டத் தொடங்கினாங்க. சூசா, எம்.எஃப். ஹுசேன் மாதிரியான ஓவியர்களெல்லாம் அப்படி உருவானவங்கதான்.”

விட்டல்ராவ் பதில் வழியாக ஒரு காலகட்டத்தை என்னால் கற்பனை செய்து பார்க்கமுடிந்தது. அந்தக் கற்பனையில் திளைத்திருக்கும்போதே விட்டல்ராவ் ”சூசாவுடைய இந்திய இளவரசி, ஹுசேனுடைய டாங்கா ஓவியம் பார்த்திருக்கீங்களா?” என்று கேட்டார்.

“பார்த்திருக்கேன் சார். எனக்கு ரொம்ப புடிச்ச ஓவியங்கள். அந்த ஓவியங்களுடைய ஏஃபோர் சைஸ் ப்ரிண்ட் அவுட்டுகளை ஒரு கண்காட்சியில வித்தாங்க. அப்ப ஒரு செட் வாங்கி வச்சிருந்தேன். வீடு மாத்தின சமயத்துல எப்படியோ தொலைஞ்சி போச்சி.”

“அவுங்க எவ்வளவு பெரிய ஆளுமைகள்ங்கறதுக்கு அந்தப் படங்கள் ஒரு முக்கியமான அடையாளம். பம்பாய் ஸ்கூலுக்கு அடுத்தபடியா முக்கியமானது கேரளா ஸ்கூல். கே.ஜி. சுப்பிரமணியன், கிருஷ்ணகுமார் மாதிரியான ஆளுமைகள்லாம் அங்க படிச்சவங்கதான். பெரிய ஓவியக்கலைஞர்களா பெண்கள் உருவானது அந்தக் காலத்துலதான். அம்ரிதா ஷெர்கில்னு ஒரு ஓவியர். பாரீஸ்க்குப் போய் படிச்சிட்டு வந்தவங்க. லீனா முகர்ஜி, பிரபா மாதிரியான ஓவியர்கள் இந்தியாவிலயே உருவானவங்க. இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைக்கிற வரைக்குமான காலகட்டம் இப்படித்தான் இருந்தது.”

கல்கத்தா, பம்பாய், கேரளம் பற்றியெல்லாம் சொன்னவர் சென்னையைப் பற்றி எதுவும் சொல்லவில்லையே என்று தோன்றியது. ஒருவேளை விடுபட்டிருக்கலாமோ என்ற எண்ணத்தில், “சென்னையில ஒன்னுமே உருவாகலையா சார்?” என்று சந்தேகமாகக் கேட்டேன்.

“இருந்தது. நான் படிச்ச ஸ்கூலாச்சே? அதை எப்படி மறக்கமுடியும்? அது ஒரு முக்கியமான ஆர்ட்

ஸ்கூல்” என்று சிரித்தார் விட்டல்ராவ்.

“ஓ. சரி சரி” என்று முகவாயை வருடியபடி அவர் சொல்லவிருக்கும் செய்திக்காகக் காத்திருந்தேன்.

“தேவிபிரசாத் ராய் சௌத்ரி பத்தி கேள்விப்பட்டிருக்கீங்களா? டி.பி.ராய் சௌத்ரின்னு சொல்வாங்க.”

“அவரைத் தெரிஞ்சிக்காம எப்படி இருக்கமுடியும் சார்? சென்னை மெரீனா கடற்கரையில இருக்கிற உழைப்பாளர் சிலையை அவர்தானே உருவாக்கினார்.”

“அவரேதான். ஆனா அவர் சிற்பி மட்டுமில்லை. நல்ல ஓவியர். கல்கத்தா ஸ்கூல பத்தி சொல்லும்போது அபனீந்திர தாகூர் பத்தி சொன்னேனே, அவருடைய மாணவர் இவர். வங்காளத்துக்காரர்தான். ஆனால், பிரிட்டன் அரசாங்கம் மெட்ராஸ்ல ஒரு ஆர்ட் ஸ்கூலத் தொடங்கி நடத்திட்டிருந்த சமயத்துல அவரைத்தான் பிரின்சிப்பலா போட்டாங்க. அவரைத் தொடர்ந்து கே.சி.எஸ். பணிக்கர், விஸ்வனாதன் மாதிரியான ஆளுமைகள் அந்த ஸ்கூல வழிநடத்தினாங்க. ஆதிமூலம், டி.கே. பத்மினி, அருள்தாஸ் எல்லாருமே அங்க உருவானவங்கதான். அபனீந்திர தாகூருடைய ஓவியத்துல ஆரம்பிச்சி ஆதிமூலம் ஓவியம் வரைக்கும் ஒவ்வொன்னா பாத்துட்டே வந்தீங்கன்னா, இந்திய ஓவியம் அடைஞ்சிருக்கிற மாற்றங்களை சுலபமா புரிஞ்சிக்க முடியும்.”

“நீங்களும் அந்த ஸ்கூல்லதான சார் படிச்சீங்க?”

“உண்மைதான். பெரிய ஓவியனாகணும்ங்கறதுதான் என்னுடைய சின்ன வயசுக் கனவு. அதுக்காகவே நான் மெட்ராஸ்க்கு வந்தேன். வேலையில சேராம ஒருவேளை நான் நேரிடையா ஆர்ட் ஸ்கூல்ல சேர்ந்திருந்தா, ஒருவேளை என் கனவு நனவாகியிருக்கலாம். ஆனா ஒரு பக்கம் வேலையையும் பார்த்துகிட்டு, இன்னொரு பக்கம் ஓவியத்தையும் கத்துக்கலாம்ன்னு நெனச்சேன். அந்த வழியில என் கனவைத் தொடர்ந்து ரொம்ப தொலைவுக்குப் போகமுடியலை.”

விட்டல்ராவ் மிகவும் தன்னிரக்கத்தோடு பேசுகிறாரோ என்று தோன்றியது. அதைத் தவிர்க்கவேண்டும் என்ற எண்ணத்தில் குறுக்கிட்டு, “ஏன் அப்படி சொல்றீங்க சார்? என்று கேட்டேன்.

“டே காலேஜ், ஈவனிங் காலேஜ் மாதிரி நான் ஸ்கூல்ல சேர்ந்த சமயத்துல, டே ஸ்கூல், ஈவனிங் ஸ்கூல்னு ரெண்டு வேளையும் நடந்திட்டிருந்தது. நாங்க சேர்ந்த சமயத்துல நிர்வாகத்துல ஏதோ மாற்றம். ஈவனிங் ஸ்கூல நிறுத்திடணும்னு முடிவெடுத்திட்டாங்க. என் பேட்ச்தான் கடைசி பேட்ச். கோர்ஸ் முடிஞ்சி சர்டிபிகேட் கொடுக்கிற சமயத்துல பணிக்கர் சம்பளம் கிடைக்கிற வேலை கையில இருக்குதேன்னு பயிற்சி செய்யறதை யாரும் நிறுத்திடக் கூடாது. தினமும் பயிற்சி செஞ்சிட்டே இருக்கணும். மெட்ராஸ் ஆர்ட் க்ளப்ல மெம்பராயி தினமும் பயிற்சி செய்யுங்கன்னு சொல்லி அனுப்பினாரு. உடனே நானும் இன்னும் ஏழெட்டு பேரும் க்ளப்ல சேர்ந்து மெம்பராயி தினம்தினமும் பயிற்சி செஞ்சோம். ஓவியங்களை வரைஞ்சோம். பல கண்காட்சிகள் வைச்சோம். வெளி மாநிலத்துல நடந்த கண்காட்சிக்குக் கூட ஓவியங்களை அனுப்பி வச்சோம். குடும்பச் சூழல் காரணமா, என்னால் அந்தப் பயிற்சியை ரொம்ப காலத்துக்குத் தொடரமுடியலை. பாதுகாப்பா வச்சிருந்த சில ஓவியங்களைக் கூட, மெட்ராஸ் வீட்டை வித்துட்டு பெங்களூருக்கு வரும் போது தெரிஞ்ச நண்பர்களுக்கு அன்பளிப்பா கொடுத்துட்டு வந்துட்டேன்.”

அவர் முகத்தில் அவரை அறியாமலேயே ஒரு வெறுமையின் நிழல் படிவதைக் கவனித்தேன். ஒரு பெருமூச்சோடு இருக்கையிலிருந்து எழுந்த விட்டல்ராவ் மௌனமாக அறைக்குள் சென்றார். சில கணங்களுக்குப் பிறகு ஒரு புத்தகத்தைக் கொண்டுவந்து என்னிடம் கொடுத்து, “ரொம்ப நல்ல புத்தகம். ஓவிய வரலாற்றைப் பத்தி தெரிஞ்சிக்கறதுக்கு உதவியா இருக்கும். புதுசா வந்திருக்குது” என்று சொன்னார்.

நான் எழுந்து நின்று அந்தப் புத்தகத்தை வாங்கிக்கொண்டேன். ‘நவீன இந்திய ஓவியம் - வரலாறும் விமர்சனமும்’ என்பது அப்புத்தகத்தின் பெயர். புத்தகத்தைப் பிரித்து பக்கங்களை வேகமாகப் புரட்டினேன். ஏராளமான படங்கள் இருந்தன. ஆற அமர ரசித்துப் பார்த்தால் படங்களை மட்டுமே பார்த்துமுடிக்க ஒரு மணி நேரம் பிடிக்கும். அந்த அளவுக்கு அழகாக இருந்தது. அதன் விரிவான உள்ளடக்கம் அந்த நூலாசிரியரின் உழைப்புக்கு எடுத்துக்காட்டாக அமைந்திருந்தது. அவர் எதையும் விட்டுவைத்த மாதிரி தெரியவில்லை.

“ஒரு தரம் படிச்சிட்டேன். கோயம்பத்தூர் ஆனந்த் இந்தப் புத்தகத்தைப்பத்தி ஒரு நிகழ்ச்சியை நடத்தணும்னு நெனச்சிருக்காரு. அதுக்காக இன்னொரு முறை படிச்சிட்டு குறிப்பெடுக்கணும். அதுக்குப் பிறகு உங்களுக்குக் கொடுக்கறேன். அவசியம் நீங்க படிக்கணும்.”

அவர் சொன்னதை ஏற்றுக்கொள்ளும் விதமாக தலையசைத்தபடியே புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டினேன்.

சில கணங்கள் மௌனமாகவே கழிந்தன. “எவ்வளவோ விஷயங்களைத் தேடித்தேடிப் படிக்கிறோம். தெரிஞ்சிக்கறோம். ஆனா எப்படியோ ஏதாவது ஒரு சின்ன தகவல் ஏதோ ஒரு விதத்துல நம்ம கண்ணுல விழாமயே போயிடுது....” என்று எதையோ சொல்வதற்குத் தொடங்கினார் விட்டல்ராவ். ஆனால், சொல்லிமுடிக்காமலேயே பாதியில் நிறுத்திவிட்டார்.


மோனிகா

அவர் எதைப்பற்றிக் குறிப்பிடுகிறார் என்று என்னால் ஊகிக்க முடியவில்லை. ஒரு கணம் அமைதியாக அவரையே கவனித்துக் கொண்டிருந்தேன். பிறகு நானாகவே, "எதைப் பத்தி சொல்றீங்க சார்?" என்று மெதுவாகக் கேட்டேன்.

"நாற்பது நாற்பத்தைந்து வருஷம் நான் சென்னையில வாழ்ந்திருக்கேன் பாவண்ணன். பல ஓவியர்களோடு பேசியிருக்கேன், பழகியிருக்கேன். அவுங்க வச்ச ஓவியக் கண்காட்சிகள்ல கலந்துகிட்டிருக்கேன். சென்னையில வாழ்ந்த ஓவியர்கள் எல்லோரைப்பத்தியும் எனக்குத் தெரியும்னு எனக்குள்ள ஒரு நம்பிக்கை இருந்தது. ஆனா, இந்தப் புத்தகத்தைப் படிச்ச பிறகு அந்த நம்பிக்கை உடைஞ்சிபோச்சு. எனக்கு அறிமுகமில்லாத ஓவியர்கள் கூட இருந்திருக்காங்கன்னு இப்ப தோணுது."

"உங்களுக்குத் தெரியாம போன அந்த ஓவியர் யார் சார்?"

"ஆர். சூடாமணின்னு ஒரு எழுத்தாளர் இருந்தாங்க, இல்லையா? இலக்கியச் சிந்தனை விருதுலாம் வாங்கியிருக்காங்க."

"ஆமாம். நல்லாவே தெரியும் சார்"

"அவுங்க எழுத்தாளர்னு எனக்குத் தெரியும். அவுங்க எழுதிய சில கதைகள் ரொம்ப புடிக்கும். நான் 'இந்த நூற்றாண்டின் சிறுகதைகள்' தொகுதியை உருவாக்கிட்டிருக்கும்போது அவுங்க ஒப்புதலோடு அவுங்களுடைய ஒரு சிறுகதையையும் அந்தத் தொகுப்புல சேர்த்திருக்கேன்."

"சரி, இப்ப அதுக்கென்ன?"

"அவுங்க ஒரு ஓவியராகவும் வாழ்ந்திருக்காங்கன்னு இந்தப் புத்தகத்துல எழுதியிருக்குது. அந்த விஷயம் எனக்குத் தெரியவே தெரியாது. சொந்த முயற்சியால அவுங்க ஓவியம் கத்துகிட்டாங்க. வாட்டர்கலர் பெயிண்டிங்ல ப்ராக்டிஸ் செஞ்சி நிறைய படங்கள் போட்டிருக்காங்க. கண்காட்சியெல்லாம் வச்சிருக்காங்க. மெட்ராஸ்லயே சுத்திகிட்டிருந்த ஆள் நானு. ஆனா என்னுடைய கவனத்துலயே இந்த விஷயம் படவே இல்லை. அந்தக் காலத்துல பத்திரிகைகள்ல பூவராகவன்ங்கறவரும் வெ.ஜெயராமன்ங்கறவரும் ஓவியங்களைப் பத்தியும் ஓவியக் கண்காட்சிகளைப் பத்தியும் தொடர்ச்சியா கட்டுரைகள் எழுதிட்டிருந்தாங்க. அவுங்க எழுதற கட்டுரைகளையெல்லாம் ஒன்னுவிடாம தேடித் தேடிப் படிப்பேன். அவுங்க கூட சூடாமணி ஓவியங்களப் பத்தி எழுதியதா ஞாபகமில்லை. சதாகாலமும் ஓவியர்களைப் பத்தியும் சிற்பிகளைப் பத்தியும் வாய் ஓயாம பேசுற வெங்கட் சாமிநாதனும் சா. கந்தசாமியும் கூட சூடாமணி ஓவியத்தைப் பத்தி ஒன்னுமே சொன்னதில்லை. சொல்லியிருந்தா எனக்கு அது ஒரு தூண்டுகோலா இருந்திருக்கும். தேடிப் போய் பார்த்திருப்பேன். அதுக்கு வாய்ப்பே இல்லாம போயிடுச்சி."

அவரை அமைதிப்படுத்தும் சொல் கிடைக்காமல் அவரையே பார்த்தபடி இருந்தேன்.

"வாட்டர்கலர் பெயிண்ட்டிங்கறது சாதாரண விஷயமில்லை பாவண்ணன். ஒரே ஒரு சின்ன ஸ்ட்ரோக் தப்பா போனாலும், மொத்த படமும் வீணாயிடும். திருத்திப் போட வழியே இருக்காது. நாலைஞ்சி மடங்கு உழைப்பைப் போட்டாத்தான் நல்லா வரும். அதுல சூடாமணி அம்மா ரொம்ப திறமைசாலியா இருந்திருக்காங்க. ஒரே ஊருக்குள்ள ரொம்ப பக்கத்துல இருந்தும் கூட, தவற விட்டுட்டேன்ங்கற எண்ணம்தான் வருத்தமா இருக்குது."

ஓரிரு கணங்கள் விட்டல்ராவ் அமைதியாக இருந்தார். எப்படியாவது உரையாடலைத் திசைதிருப்பி, அவரை மீண்டும் பழைய உற்சாகமான மனநிலைக்குக் கொண்டுவரவேண்டும் என்று தோன்றியது.

ஒருகணம் என் மடிமீது வைத்திருந்த ஓவியப் புத்தகத்தின் மீது பார்வையைத் திருப்பினேன். அப்போதுதான் நான் அப்புத்தகத்தின் ஆசிரியர் பெயரைப் பார்த்தேன். அடுத்த கணமே, "மோனிகா ஓவியரா அல்லது விமர்சகரா சார்?" என்று ஒரு கேள்வியை எழுப்பினேன். அதைக் கேட்டதுமே அக்கேள்விக்கு பதில் சொல்லும் உற்சாகத்தோடு அவர் முகத்தில் புன்னகை படர்ந்தது.

பாவண்ணன்
<writerpaavannan2015@gmail.com>

# கே. சச்சிதானந்தன் கவிதைகள்

தமிழில்: தி.இரா.மீனா



## தவறவிட்ட இலக்குகள்

திடீரென நான் என் வாழ்க்கையில் தவற விட்ட
எல்லா இலக்குகளையும் நினைவு கூர்கிறேன்.
மாமரத்தினடியில் சருகுகளுக்குக் கீழே
மறந்து வைத்துவிட்ட ஒளிவிடும் பத்து பளிங்குக் கற்கள்,
மழை பெய்யத் தவறிய பொழுதில்
அப்புவின் முடி திருத்தகத்தில் விட்டுப் போன குடை,
கிராமத்துப் பள்ளியிலிருந்து திரும்பும் நாளில்
முந்திரி மரத்தில் ஏறிய பொழுது
சட்டைப் பையிலிருந்து தவறி விழுந்த பேனா,
ரிகாவின் விடுதி அலமாரியில்
தொங்கிக் கொண்டிருக்கும் இள நீலச்சட்டை,
திரும்பி வராத, கடன் கொடுத்த, புத்தகங்களின் பட்டியல்,
சில மீட்கப்படாத கடன்கள், ஒரு சில ஒருதலைக் காதல்.

மறதி மட்டும் என்னை ஒரு போதும் மறந்ததில்லை.
காதலில் விழுந்த நாளில் இதயத்தைத் தவறவிட்டு
கவிதைகளை உருவகங்களாய் கிறுக்கினேன்.
பின்னாளில் மலைகளைப் பார்த்த போது
வானம் அவற்றையும், மேகங்கள் வானவில்லையும்
தவற விட்டுவிட்டதாய் உணரத் தொடங்கினேன்

நாமிருக்கும் இந்த பூமி கடவுளால் தவற விடப்பட்டதாக
அண்மையில் சந்தேகிக்கத் தொடங்கியிருக்கிறேன்,
அவர் நினைவுகூர்ந்து உரிமை கொண்டாடுவது இந்த வரிசையில் :
மரங்கள், ஆறுகள், நாம் என்று.



## ஈரப்புல்லின் மேல்

ஈரப் புல்லின் மேலிருக்கும் பாதச்சுவடு
சாவினுடையதாக இருக்க வேண்டிய அவசியமில்லை;
கடந்து போன ஒரு நாட்டுப் பாடலாக இருக்கலாம்.

உங்கள் உள்ளங்கையில் நடுங்கிக் கொண்டிருக்கிற
பட்டாம்பூச்சி எதையோ உங்களிடம் சொல்ல நினைக்கிறது.

கீழே விழவிருக்கிற மாங்கனிகளும் மல்லிகைகளும்
நீங்கள் நடுவழியில் அவைகளை நிறுத்துவீர்களென
உங்கள் கரங்களை எதிர் நோக்கும்!

கடனை திருப்பியடைக்க வேண்டாமெனச் சொல்லும்
கடலின் கிசுகிசுப்பு உங்கள் காதுகளில் கேட்கவில்லையா?

உங்கள் சிறிய அறையின் இருட்டு கூட
ஒரு துண்டு வானத்தை வைத்திருக்கிறது.
எல்லாம் ஆசீர்வதிக்கப்பட்டவை:
மீன், சுவர்க்கோழி, கோரைப்புல்,
சூரிய ஒளி, உதடுகள், வார்த்தைகள் என்று.

## எழுதப்படாத கவிதை

இன்னும் யாரும்
எழுதி விடாத கவிதை நான்.
பல கவிஞர்களின் விரல்நுனி வரை பயணித்துவிட்டு
ஆனால் பின்னடைவோடு, வெளிப்படுத்தாத கனவுக் காதலாய்
படிவமின்றி நின்று விடுகிறேன்.
எதிர்காலம் என்பது இருக்கும் வரை
எனக்கு மொழியைப் பற்றிய பயமில்லை.
ஒருநாள் எனக்கான வார்த்தைகளைக் கண்டுபிடிப்பேன்
ஒரு காலியான பக்கத்தில்
ஒரு புது நட்சத்திரத்தின் கீழ்
அவிழ்ந்து மிக மெதுவாய் எழுகிற பாய்மரத் துணியில்
ஒரு குழந்தை காண்கிற அதிசயமாய்.

தி.இரா. மீனா <meenmix@yahoo.com>

# நீண்ட ஆங்கிலத்தால் நேமியின் அளந்தான்

**இந்திரா பார்த்தசாரதி**

ஒவ்வொரு படைப்பாளியும் அவன் கலை அனுபவத்துக்கேற்ப ஒரு பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறான். அது அவன் காலத்திய கால, இடப் பரிமாணங்களுக்குள் அடங்கி விடக்கூடும். ஆனால், படைப்பாளிகளில் மிக உன்னதமானவர்கள் படைக்கும் பிரபஞ்சங்கள், கால, இட வரையறைக்குள் அடங்காமல், எக்காலக் கண்ணோட்டத்துக்கும் உரியவனவாய், அவ்வவ் காலத்து வாழ்க்கை மதிப்பீடுகளுக்கேற்பப் பொருள்படுவனவாய், ‘இதுதான் இப்படைப்பினுடைய அர்த்தத்தின் எல்லை நிலம்‘ என்று துணியப் படாததாய், காலத்தை வென்று நிற்கும்.

அத்தகையப் படைப்பாளிகளில் மிக முக்கியமானவர்கள் என்று வால்மீகி, வியாசர், திருவள்ளுவர், இளங்கோ, ஹோமர், தாந்தே, கம்பன், ஷேக்ஸ்பியர், டால்ஸ்டாய் ஆகியோரைக் கூறலாம். நாடக ஆசிரியர்களில் தலை சிறந்தவர் ஷேக்ஸ்பியர். பைபிளுக்கு அடுத்தபடியாக, உலக மொழிகளில் அதிகமாக மொழிபெயர்க்கப் பட்டிருப்பவை ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் என்று கூறப்படுகிறது.

உலகத்தில் காணப்படும் கலாசார வேறுபாடுகள், இந்த உலகக் கவிஞர்களைப் புரிந்துகொள்ளத் தடையாக இருப்பதில்லை. காரணம், இப்படைப்புகளின் அடிப்படைக் கரு மனிதன், உலக மனிதன். கோட்பாட்டு ரீதியாகச் சொல்லப் போனால், மனிதம். ‘மானுடம் வென்றதம்மா’ என்கிறான் கம்பன். ஷேக்ஸ்பியரின் ‘ஜூலியஸ் ஸீஸரில்’ ப்ரூட்டஸ்ஸைப் பற்றிக் குறிப்பிடும்போது, அவன் எதிரி மார்க் ஆன்டனி கூறுகிறான்:

> மென்மையான குணம், இவன் கனவான்,
> இவன் உயர் பண்புகளை நோக்கின், இயற்கை
> உலகுக்கு அறிவிக்கும்,
> இவனன்றோ ஒரு மனிதன்!



மனிதன் பலங்களும் பலகீனங்களும் நிறைந்தவன். இதுவே இலக்கியத்துக்குச் சுவாரஸ்யமான பாடுபொருள். ஷேக்ஸ்பியரின் உலகம் மிகவும் விஸ்தாரமானது. அதில் நாம் பல திறப்பட்ட மனிதர்களை காண்கின்றோம். ஒவ்வொரு நூற்றாண்டிலும் அக்காலத்திய மதிப்பீடுகளுக்கேற்ப அவர்களை நம்மால் புரிந்துகொள்ள முடியும். என்றென்றும் சமகாலத்தவர்கள். இதைக் கருத்தில் கொண்டுதான், யான் காட் (Jan Kot) என்ற போலிஷ் விமர்சகர், ‘Shakespeare, our contemporary’ என்ற ஓர் அருமையான நூல் எழுதியிருக்கிறார்.

ஷேக்ஸ்பியருக்கு தம் நாடகங்களின் அமரத்வம் பற்றி எந்தவிதமான சந்தேகமும் இருந்ததாகத் தெரியவில்லை. ‘ஜூலியஸ் ஸீஸரில்’ காஷியஸ் கூறுகிறான்:

> இன்னும் எத்தனைத் தோன்றியிராத நாடுகளில்,
> இன்னும் எத்தனை அறிந்திராத மொழிகளில்,
> இன்று இங்கு நடக்கும் இக்காட்சி
> இதுபோல் நடத்திக் காட்டப்பட இருக்கின்றதோ!
> (அங்கம் III, காட்சி I-113-115)

ஷேக்ஸ்பியரின் நம்பிக்கை வீண் போகவில்லை. அண்மையில் வந்த ஐக்கிய நாட்டுக் கலாசார அறிக்கையின்படி, அகில உலகில், பெரும்பான்மையான மொழிகளில் அதிகமாக நடித்துக் காட்டபட்டவை ஷேக்ஸ்பியர் நாடகங்கள்தாம்! ஷேக்ஸ்பியரைப் பிடிக்காத பெர்னார்ட் ஷா, ஷேக்ஸ்பியரைப் புகழ்வதை, ‘bardolotary’ (bard - கவிஞன், idolotary - மிகைப்படப் புகழ்தல்) என்பார். ஆனால், பெர்னார்ட் ஷா நாடகங்கள் அவர் காலத்துக்குப் பிறகு மேடை ஏறுவது மிகவும் குறைந்துவிட்டது.

ஷேக்ஸ்பியர் அவர் காலத்துப் புலவர்களில் படிப்பாளியில்லை. அவர்


ஷேக்ஸ்பியர்

சிறு வயதிலேயே நாடகக் குழுவில் சேர்ந்துவிட்டார். அந்த காலத்தில் ஐரோப்பாவில் அறிவாளி என்றால் அவருக்குத் தாய்மொழியைத் தவிர லத்தீனும் கிரேக்கமும் தெரிந்திருக்க வேண்டும். ஆனால், ஷேக்ஸ்பியருக்கு 'மிகக் குறைவாக கிரேக்கம் தெரியும், அதைவிடக் குறைவாக லத்தீன் தெரியும்' (little Greek and less Latin - Ben Jonson). இவ்வாறு கூறிய, ஷேக்ஸ்பியர் காலத்தவராகிய மூத்த நாடக ஆசிரியர் பென் ஜான்ஸன் இன்னொரு இடத்தில் சொல்லுகிறார் 'ஷேக்ஸ்பியர் ஒரு காலத்தவரல்லர், எல்லாக் காலத்துக்கும் உரியவர்'.

ஷேக்ஸ்பியருக்குப் பல்கலைகழகப் படிப்பு இல்லாவிட்டாலும், ஆங்கிலத்தில் கிடைத்த கிரேக்க - ரோமானிய வீரர்களின் வரலாற்றுக் கதைகள், பிரிட்டனில் வழங்கிய நாடோடி, வரலாற்றுச் செய்திகள், ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பாகி இருந்த மான்டெய்னின் தத்துவார்த்தக் கோட்பாடுகள், இத்தாலிய பொக்காஷியோ எழுதிய கதைகளின் ஆங்கில மொழி ஆக்கங்கள் ஆகியவை அவருக்கு அத்துப்படியாக இருந்தன என்று அவர் படைப்புக்களின்றும் அறியலாம். அவர் எழுதியவை அனைத்தும் 'கடன் வாங்கிய கதைகள்'தாம். ஆனால், இரும்பைப் பொன்னாக்கும் சித்து வேலையைத்தான் அவர் செய்தார்.

தற்காலத்திய ஷேக்ஸ்பியர் அறிஞர்களில் தலைசிறந்தவரான ஹெரால்ட் ப்ளூம் கூறுகிறார்: 'உலக இலக்கியங்களில் படைக்கப்பட்ட மகத்தான கதை மாந்தர்களில் மிகச் சிறந்தவர்கள் இருவர். ஒருவர் செர்வாண்டிஸ் (Cervantes) படைத்த 'Don Quixote'. இன்னொருவர், ஷேக்ஸ்பியரின் 'ஃபால்ஸ்டாஃப்' (Falstaff). ஷேக்ஸ்பியரின் இன்னொரு பாதி (alter ego) ஃபால்ஸ்டாஃப். அவனுக்கு உலகில் எதுவுமே புனிதமில்லை. பிரபஞ்ச நையாண்டிச் சிரிப்புதான் (cosmic laughter) அவனுடைய மதம். அவன் ஒரு comic-tragic கலகக்காரன்.'

ஃபால்ஸ்டாஃபின் உருவமே பார்க்கின்றவர்களுக்கு நகைப்பைத் தரும். பிரமாண்டமான தொந்தி. அவனே சொல்லுகிறான்: 'நான் என் பாதங்களைப் பார்த்து இருபது வருஷங்கள் ஆகின்றன!'

குடித்தல், திருடுதல், பொய் சொல்லுதல் ஆகியவைதான் அவன் தத்துவார்த்தக் கோட்பாடுகள். இளவரசன் ஹாரி (பின்னால், ஹென்றி IV)யின் நண்பர் குழாமில் முக்கியமானவன். பகைவனுடன் போர் புரிந்து அமரத்வம் (Honour) அடைவதைப் பற்றி அவன் கூறுகிறான்: 'வீர மரணம்! ஹா! அது என்ன? வெறும் ஒரு வார்த்தை! காற்று! வாயொலி! விருது முழங்கும் வெட்டி வார்த்தை! புதன்கிழமை செத்துப் போனவனுக்கு, பாவம், அவனுக்குத் தெரியுமா, தான் கீர்த்தி அடைந்திருக்கின்றோம் என்பது பற்றி? அவனால் உணர முடியுமா? கேட்க முடியுமா? 'புனிதப் போர்', 'வீர மரணம்' ஹா! எத்தனை வார்த்தை ஜாலங்கள்! போரில் கீர்த்தி என்பது வெறும் வாய் முரசு! எனக்கு அது வேண்டாம்!'


பெர்னாட்ஷா

எலிசபெத்தியக் காலத்துப் பார்வையாளர்கள், நாம் இப்பொழுது ஃபால்ஸ்டாஃபைப் பார்ப்பது போல் நவீன மதிப்பீடுகளின் அடிப்படையில் பார்த்திருக்க முடியுமா என்பது தெரியாது. ஆனால், அக்காலத்திலும் ஃபால்ஸ்டாஃப் தான் மக்களுக்குப் பிடித்தமான கதாபாத்திரமாக இருந்திருக்கின்றான்! இதுதான் ஒரு மாபெரும் படைப்பாளியின் காலத்தை வென்ற படைப்பாற்றல். அதே சமயத்தில், அந்தக் காலத்திலும், சாதாரணப் பொது மக்கள், ஆளும் வர்க்கத்தின் அதிகாரத்துக்கான குடும்பச் சண்டைகளைப் பற்றியும், நாட்டுப் பற்று என்பதின் பேரில் அரசர்களுடைய பிற நாட்டு ஆக்ரமிப்புப் பற்றியும் எந்தவிதமான அபிப்பிராயமும் இல்லாமல் இருந்திருப்பார்களா என்பது யோசிக்க வேண்டிய விஷயம்.

ஷேக்ஸ்பியர் இருபத்தைந்து ஆண்டுகளுக்குக் குறைவான காலத்தில் முப்பத்தெட்டு நாடகங்கள் எழுதியிருக்கிறார். இவற்றில் 13 இன்பவியல் (comedies) 10 துன்பவியல் (tragedie) நாடகங்கள், 10 வரலாற்று நாடகங்கள், 5 ரொமன்ஸ் நாடகங்கள், சானெட்ஸ், நீண்ட கவிதைகள் ஆகியவை எழுதிருக்கிறார். ஐம்பத்திரெண்டு ஆண்டுகள் இருந்த ஒருவரால் இத்தனைப் படைத்திருப்பது ஓர் அசுர சாதனை. (அவர் வாழ்நாளின் கடைசி சில ஆண்டுகள் எழுதவேயில்லை என்கிறார்கள். 'The Tempest'தான் அவர் எழுதிய இறுதி நாடகம். அதில் Prospero, 'நான் என்னுடைய மந்திரக் கோலை இனித் தொடப் போவதில்லை' என்று கூறுவதுதான் அவர் அதற்குப் பிறகு எழுதவில்லை என்பதைக் குறிக்கும் என்று விமர்சகர்கள் சொல்லுகிறார்கள்.)

வியக்கத்தக்க செயல் புரியும் எவரைப் பற்றியும் கற்பனைக் கதைகளும் கருத்துகளும் எழுவது இயல்பு. நம் நாட்டிலும், கம்பனைப் பற்றியும் வள்ளுவர் பற்றியும் காளிதாசனைப் பற்றியும் எத்தனைக் கட்டுக்கதைகளும் அதீதக் கற்பனைகளும் உள்ளன!

ஷேக்ஸ்பியர் அவருடைய நாடகங்களில் நடித்தாரா இல்லையா என்பது தெரியவில்லை. ஆனால், அவருடைய மிகச்சிறந்த நாடகமாகிய 'ஹாம்லெட்'டில் அவர், ஹாம்லெட்டின் கொலைசெய்யப்பட்ட தந்தையின் 'ஆவி'(ghost)யாக நடித்திருக்கிறார் என்பது அண்மையில் வந்திருக்கும் ஓர் ஆராய்ச்சி முடிவு.

எட்மன்ட் ஸ்பென்ஸர் என்ற ஒரு கவிஞர் ஆங்கிலக் கவிஞர்களைப் பற்றியெல்லாம் பாடிவிட்டு, ஷேக்ஸ்பியரைப் பற்றிச் சொல்லும்போது, 'Shakespeare! On him no speech!' என்கிறான். 'சொல் குறுக, நிமிர் கீர்த்தி' என்று கம்பன் கூறுவதைப் போல், ஷேக்ஸ்பியரின் நாடக ஆற்றல் சொற்களை விஞ்சி இருக்கின்றது.

**இந்திரா பார்த்தசாரதி**
<parthasarathyindira@gmail.com>

# ஆர். வத்ஸலா கவிதைகள்



## அந்தி

அந்தி அடியெடுத்து வைக்கிறது
மனம் பரபரக்கிறது
நரம்புகள் துறுதுறுக்கின்றன
நெருங்குகிறது
நீ வரும் நேரம்

இரவிருட்டு கவியும் வரை
இப்பரிதவிப்பில் கழிக்க சபிக்கப்பட்டிருக்கிறேன்
நான்
தினமும்

## தொழில்

தெருவோரத்தில் செருப்பு தைக்கும் தொழிலாளி
என் செருப்பைத் தைத்த பின்
என் பாதத்தை உறுத்தாமலிருக்க
கடைசி முடிச்சை தேய்த்து
சமனப்படுத்துவதைப் போல

வீட்டு வாசலில் நிற்கும் இஸ்திரி தொழிலாளி
தன்னெதிரே நடை பயின்ற குழந்தையின்
முதல் பள்ளி சீருடையின் கடைசி சுருக்கத்தை
பதமாக சூடேற்றிய பெட்டியால்
தேய்த்து நீக்குவதைப் போல

அறுவை சிகிச்சை முடித்த பின்
கடைசி தையல் வரை முழு கவனம் செலுத்தும்
மருத்துவரைப் போல

ஆண்டுக் கணக்காய் செய்த ஆராய்ச்சியின் வெற்றி
கைக்கெட்டும் தூரத்தில் என உணர்ந்த விஞ்ஞானி
கடைசி சொட்டு ரசாயனத்தை
சோதனைக் குழாயில்
சீராக சேர்ப்பதைப் போல

நான் என் கவிதையை கடைசி சொல் வரை செதுக்க
அருள் புரிவாய்
பராசக்தி!

**ஆர். வத்ஸலா** <vatsala06@gmail.com>

தருமமிகு சென்னை - 10

# முகவரி தரும் முகவரிகள

சந்தியா நடராஜன்

'அறம் செய விரும்பு' என்ற ஔவையின் அறிவுரையை ஏற்றிப்போற்றும் அரசியல்வாதி எவரேனும் உண்டா என்றால், 'சென்னை மாநகரில் எம்ஜிஆர் பக்தரான சைதை துரைசாமி என்ற சென்னையின் முன்னாள் மேயர் ஒருவர் இருக்கிறார்' என்று உரக்கச் சொல்வார் முகவரி ரமேஷ். ஏழைச் சொல் அம்பலம் ஏறுமா என்றால் 'ஏறும்' என்பதற்கு நேரடி சாட்சியாக சென்னையில் வாழ்ந்து வருகிறவர் நண்பர் முகவரி ரமேஷ்.

'தும்பிவாடி துரைசாமி' என்றழைக்கப்பட்டவரை சைதை துரைசாமி என்று பெயர் மாற்றம் செய்தவர் தமிழகத்தின் முன்னாள் முதல்வர் எம்ஜிஆர். திமுகவிலிருந்து எம்ஜிஆர் வெளியேற்றப்பட்டபோது செயல்திறனும் சாகசகுணமும் கொண்ட 19 வயது அதிமுக இளைஞனாக உருவெடுத்தவர் சைதை துரைசாமி. 'திமுக சட்டமன்ற உறுப்பினர்கள் மக்கள் நம்பிக்கையை இழந்துவிட்டார்கள், அதனால் அவர்கள் ராஜினமா செய்ய வேண்டும் என்ற கோரிக்கை மனுவை திமுக சட்டமன்ற உறுப்பினர்களிடம் முன்வைக்க வேண்டும்' என்று எம்ஜிஆர் குரல் கொடுத்தபோது அத்தகைய மனுவுடன் முதல்வர் கலைஞரைச் சந்தித்த அந்நாளைய சென்னை துணை மேயர் சடகோபனுடன் சென்றவர் சைதை துரைசாமி. அப்போது கலைஞர் மனு கொடுத்தவரிடம் ஒரு எலுமிச்சை



பழத்தை கொடுத்தாராம். பின்னர் பத்திரிக்கையாளர் சந்திப்பின்போது மனு கொடுத்தவரிடம் ஏன் எலுமிச்சை பழம் கொடுத்தேன் என்று விளக்கம் அளித்தாராம். அதிமுகவினர் மனப்பிறழ்வுக்கு ஆட்பட்டிருக்கிறார்கள் என்று பொருள்படும்படி 'தெளிவற்றவர்கள் தேய்த்துக் குளிக்கட்டும்' என்று சொன்னாராம். அதற்குப் பதிலடி கொடுக்கும் வகையில் சைதை துரைசாமி ஆற்றிய எதிர்வினைதான் அவரை எம்ஜிஆரின் இதயத்தில் இடம்பெறச் செய்தது. 'அதிமுகவின் பகத்சிங்' என்று எம்ஜிஆர் அவரை அடையாளம் கண்டு கொண்டார்.

அதிமுக உதயமான பிறகு, 'ஏன் விலக்கினோம் எம்ஜிஆரை' என்று விளக்கம் அளிக்கும் வகையில் சைதை தேரடித் தெருவில் ஒரு திமுக பொதுக்கூட்டம் ஏற்பாடானது. முதல்வர் கலைஞர் மேடையில் இருந்திருக்கிறார். 26 எலுமிச்சம் பழங்கள் கொண்ட மாலையுடன் திமுக கூட்டம் நடந்த மேடைக்கு அருகில் சென்று காத்துக் கொண்டிருக்கிறார் சைதை. பலத்த போலீஸ் பாதுகாப்புடன் நடந்த கூட்டம் அது. அப்போது, 'முதல்வருக்கு மாலை அணிவிப்பவர்கள் தற்போது அணிவிக்காலம்' என்று அறிவித்திருக்கிறார்கள். மேடைக்குச் செல்லும் வரிசையில் ஒரு திமுககாரரைப் போல சைதையும் நின்று நகர்ந்து மேடையேறியிருக்கிறார். அங்கிருந்த



சைதை துரைசாமி



முகவரி ரமேஷ்.

திமுக வட்டச் செயலாளர் Y.M. சைதை திமுகவுக்கு திரும்பிவிட்டதாக நினைத்து,'நடிகர் கட்சிக்காரர்கள் திமுகவுக்கு திரும்பி வந்திருக்கிறார்கள்' என்று ஒலிப்பெருக்கியில் அறிவிக்கச் சொல்லவா' என்று கேட்டாராம். அதெல்லாம் வேண்டாம் என்று சொல்லிவிட்டு வரிசையில் நின்று ஒரு பத்து பேர் மேடைக்குச் சென்று திரும்பியவுடன் சைதை மேடையை அடைந்திருக்கிறார். ஒலி பெருக்கி முன் யாரும் இல்லை. மேடையில் முதல்வரை சூழ்ந்தபடி கூட்டம். சட்டென்று ஒலிபெருக்கி முன் வாழ்த்தி மாலையிட வந்தவர் போல நின்று, 'மனுகொடுக்கவந்த எங்களை தெளிவற்றவர்கள் என்று சொன்ன முதல்வரே! புரட்சித் தலைவர் எம்ஜிஆரை கட்சியிலிருந்து நீக்கிய நீங்களும் அதற்காகக் கையெழுத்திட்ட 26 செயற்குழு உறுப்பினர்களும்தான் தெளிவற்றவர்கள். உங்களுக்காக இந்த எலுமிச்சை மாலை' என்று சொல்லி கலைஞரிடம் ஒரு எலுமிச்சை பழத்தை கொடுத்துவிட்டு அந்த மாலையையும் அணிவித்திருக்கிறார். முதல்வரை ராஜினாமா செய்யச் சொல்லி அச்சிட்டிருந்த துண்டறிக்கைகளையும் மேடையிலிருந்தபடி வீசியிருக்கிறார். காவலர்களும் கட்சிக்காரர்களும் சுதாரிப்பதற்குள் மின்னல் வேகத்தில் நிகழ்த்தியிருக்கிறார் இந்த சாகசத்தை. அடுத்த நொடிப்பொழுதில் கட்சிக்காரர்களின் கோபத்திற்கும் காவலர்களின் தாக்குதலுக்கும் ஆளாகி சுய நினைவிழந்த நிலையில் காவல் நிலையத்திற்கு கொண்டு செல்லப்பட்டார். மயக்கம் தெளிந்த பின் கைது செய்யப்பட்டு சிறையிலடைக்கப்பட்டார்.

தகவலறிந்த எம்ஜிஆர் காவல் நிலையத்தைத் தொடர்புகொண்டு சைதை துரைசாமியிடம் பேசி ஆறுதல் சொல்லியிருக்கிறார். எம்ஜிஆரைப் பார்க்கமாட்டோமா என்று ஏங்கியிருந்த துரைசாமிக்கு எம்ஜிஆரின் குரலை கேட்டவுடன் பட்டதுயரம் பறந்து போயிருக்கும். சைதை துரைசாமியை 'அதிமுகவின் முதல் தியாகி' என்று அறிவித்தார் எம்ஜிஆர்.

இப்படி அரசியலில் அதிரடியாக நுழைந்த சைதை துரைசாமி மாநகராட்சியின் மேயரானார். கொளத்தூர் சட்டமன்ற தேர்தலில் இன்றைய முதல்வர் ஸ்டாலினை எதிர்த்துப் போட்டியிட்ட பெருமையும் அவருக்குண்டு. 1984 முதல் 1989 வரை தமிழகச் சட்டமன்ற உறுப்பினராகப் பணியாற்றினார். இவையெல்லாம் ஒரு தனிமனிதனின் சாதனை, வெற்றி என்று வகைப்படுத்திவிடலாம்.

ஆனால், ஒரு அரசியல்வாதி சமூக அக்கறையுடன் மனிதநேய அறக்கட்டளை என்ற அமைப்பின் மூலம் ஐஏஸ், ஐபிஎஸ் தேர்வெழுதும் மாணவர்களுக்கும் தமிழகத் தேர்வாணையத் தேர்வுகளுக்குத் தயாராகும் மாணவர்களுக்கும் இலவசப் பயிற்சி அளித்து வெற்றி பெறச் செய்து வருகிறார் என்பதுதான் வியப்பளிக்கும்

செய்தி. சென்னையைத் 'தருமமிகு சென்னை' என்று குறிப்பிட்டார் வள்ளலார். பச்சையப்ப வள்ளல் தொடங்கி ஈரமணம்கொண்ட எத்தனை எத்தனை தயாளர்களைத் தந்து கொண்டிருக்கிறது சென்னை.

சைதை துரைசாமி வேளச்சேரியில் ஒரு திருமண மண்டபமும் கட்டி வைத்திருக்கிறார். ஏழை எளிய மக்களின் திருமண நிகழ்வுகளுக்கு கட்டணம் ஏதுமின்றி கதவுகளைத் திறந்து வைத்திருக்கிறார் இந்த அரசியல்வாதி. இவையெல்லாம் ஒரு பிரமுகருக்கு சாத்தியம்தான்.

ஆனால், ஏதுமற்ற கூலிவேலை செய்யும் பெற்றோர்களின் மகன் ஒருவன் தான் செய்யும் அறச்செயலுக்கு ஆதரவு கோரி எழுதிய கடிதம் கண்டு, அவனது நேர்மையையும் இலட்சியத்தையும் உணர்ந்து அவனைத் தானாகவே தேடி ஓடி உதவும் பிரமுகர் இருப்பதற்கு வாய்ப்பில்லை. அத்தகைய செயலாற்றியவர் சைதை துரைசாமி என்ற அரசியல்வாதி. அவரது உத்தம குணத்தை உணர்ந்து நெகிழ்ச்சி அடைந்தேன்.

அப்படி உதவிகேட்டு ஒரு கடிதம் எழுதியவர்தான் 'முகவரி' ரமேஷ். இன்று ஆயிரம் பேர் ரமேஷின் உதவியை நாடி முகவரி அறக்கட்டளைக்குச் செல்கிறார்கள்.

யார் இந்த முகவரி ரமேஷ்?

சென்னைக்கும் இவருக்கும் என்ன தொடர்பு? சேலம் மாவட்டம் ஆத்தூரைச் சேர்ந்தவர் ரமேஷ். குடும்பத்துக்கு கொஞ்சம் நிலம் உண்டு. விளைச்சல் அதிகம் இருக்காது. அப்பா கூலி வேலை செய்து பிழைக்க சென்னைக்கு வந்தார். சென்னை அண்ணா நகரில் அமைச்சர் ஆற்காட்டார் வீட்டுக்கு அருகில் நடைபாதைவாசியானர். மண் வேலைக்குப் போவதும் கட்டிட வேலைக்குப் போவதும் அவரது தினசரி வேலை. அவ்வப்போது ஊரிலிருந்து கிளம்பி அம்மாவும் சென்னைக்கு வந்து அப்பாவுடன் வேலை செய்வார். வீடுவாசல் எதுவும் இல்லை. இந்த நிலையில் 1991ஆம் ஆண்டு 8 ஆவது படிக்கும்போது ரமேஷ் ஒரு லாரியில் ஏறி சென்னை வந்தார். அது பள்ளி விடுமுறைக் காலம். நாளைக்கு 17 ரூபாய் கூலி. வறுமையின் வலியையும் உழைப்பின் வலியையும் ரமேஷ் உணரத் தொடங்கிய காலம்.

ரமேஷ் நாமக்கல் நகரில் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது அவரது அக்கா இதய நோயாளி ஆனார். 1998இல் ரமேஷின் அக்கா சென்னை அரசு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். அவரை கவனித்துக் கொள்ள ரமேஷும் சென்னை வந்து நடைபாதை வாழ்க்கைக்குப் பழகிக்கொண்டார். இதய வால்வு பழுதாகி அக்கா இறந்து போனாள். அம்மா அடிக்கடி வேலைக்காகச் சென்னை சென்று விடுவதால் 'அக்கா' தான் ரமேஷீன் அம்மாவாக இருந்தாள். பல ஆண்டுகள் கழித்து தான் ரமேஷுக்கு தனது அம்மா வேறு, அக்கா வேறு என்ற புரிதல் ஏற்பட்டது. அக்காவே உலகம் என்றிருந்த அவருக்கு அக்காவின் இழப்பை தாங்கமுடியவில்லை. அக்காவை காப்பாற்றியிருக்க முடியும் என்ற உணர்வு நீங்காது நிலைபெற்றது. அதற்கு தான் என்ன செய்யமுடியும் என்ற கேள்வி எழும்; ஓயும்; அலைபாயும்; அவிந்து அடங்கும். 34 வயதில் அக்கா மறைந்தாள். அவருக்கும் அக்காவுக்கும் வயதில் 14 ஆண்டு கால இடைவெளி. ஒரு மரணத்தின் தாக்கம் அவரது வாழ்க்கைப் பாதை இன்னதென்று அவருக்கு காட்டிவிட்டது.

இந்த நிலையில் 2000ஆம் ஆண்டு ரமேஷ்க்கு பத்தாம் வகுப்புத் தேர்வில் 500க்கு 463 மதிப்பெண்கள் பெற்று தேர்ச்சி பெற்றிருந்த கஸ்தூரி என்ற பெண் அறிமுகமானாள். கஸ்தூரி பக்கத்துத் தோட்டத்தில் வசித்தவள். ஆத்தூரில் தோட்டம் என்றால் ஒரு ஏக்கர் அல்லது அரை ஏக்கர் நிலம் கொண்ட 'காடு' என்றழைக்கப்படும் வசிப்பிடம். அந்த நிலமே அவர்களுக்கு வாழ்வாதாரம்.

+2 படிக்க கஸ்தூரிக்கு குடும்பநிலை ஏதுவாக இல்லை. தனது இல்லாமையையும் இயலாமையையும் ரமேஷிடம் கூறி அரற்றுவாள் கஸ்தூரி. ஒருநாள் நல்ல மருத்துவர் இருந்திருந்தால் அக்காவை காப்பாற்றியிருக்க முடியும் என்ற ஒரு உணர்வெழுச்சியில், 'கஸ்தூரி நீ நல்லா படி நான் உன்னை டாக்டராக்கிறேன்' என்று சொல்லிவிட்டார். சொன்னதோடு நிற்கவில்லை. தாகூர் பள்ளியில் +2 படிப்பைத் தொடர கஸ்தூரிக்கு ஏற்பாடு செய்து தந்தார். அப்பள்ளியின் இயக்குநர்களில் ஒருவரான காளியப்பன் கஸ்தூரியின் கல்விக் கட்டணத்தை ஏற்றுக் கொண்டார்.

கஸ்தூரி +2 படித்து 1200க்கு 1136 மதிப்பெண் பெற்றாள். நல்ல மதிப்பெண் பெற்றிருந்த போதிலும் மருத்துவத் தேர்விற்கான நுழைவுத் தேர்வில் இலக்கை எட்ட முடியாமல் போனது. ஆனால், ரமேஷும் அவரது தம்பி லட்சுமணனும் ஊக்கமும் உதவியும் அளித்து மீண்டும் நுழைவுத் தேர்வுக்கு கஸ்தூரியைப் படிக்கவைத்தார்கள். அப்போது ரமேஷ் சென்னையில் சி.ஏ. படித்துக் கொண்டிருந்தார்.

2003இல் செங்கல்பட்டு அரசு மருத்துவ கல்லூரியில் கஸ்தூரிக்கு சீட் கிடைத்தது. ஆனால், மருத்துவக் கல்லூரி படிப்பு செலவுக்கு என்ன செய்வது? வாடிய முகத்துடன் வந்து நின்றாள். என்றைக்கோ கொடுத்த வாக்கு ஏதுமற்ற இந்த இளைஞனை வாட்டி எடுத்தது.

ஆடிட்டர் ஆபிசுக்கு வந்து போகும் பெரிய மனிதர்களிடம் உதவி கோரலாம், அது போதாது. ரமேஷின் மீது அசைக்கமுடியாத நம்பிக்கை வைத்திருந்த கஸ்தூரியின் கனவை நனவாக்கும் முயற்சியில் இறங்கினார். அவருக்கு உறுதுணையாக நின்றார்கள். அவரது தம்பி லட்சுமணன், மங்களபுரம்



ஏ.ஆர். முருகதாஸ்



டாக்டர் சுமதி

சரவணன் மற்றும் நண்பர்கள். மாநில அளவில் நுழைவுத்தேர்வில் மூன்றாம் இடம் பெற்ற கஸ்தூரிக்கு சி.ஏ படித்துக் கொண்டிருக்கும் ரமேஷ் என்ன செய்ய முடியும்? யாரை பார்ப்பது? யாரிடம் உதவி கோருவது? SRM பச்சமுத்து முதல் இயக்குநர் சேரன் வரை எல்லா பெரிய மனிதர்களையும் பார்த்து வர முயற்சி செய்தார் ரமேஷ். அப்போதுதான் 2002ஆம் ஆண்டில் 'ரமணா' திரைப்படம் வெளியானது. அப்படத்தின் தாக்கம் திரைப்பட இயக்குநர் முருகதாஸின் மீது கவனம் கொள்ளச் செய்தது. கஸ்தூரியின் நிலையை விளக்கி முருகதாஸுக்கு ரமேஷ் ஒரு கடிதம் எழுதினார். ஏதுமற்ற ஒருவன் புகழ்பெற்ற திரைப்பட இயக்குநருக்கு தனக்குத் தெரிந்த ஏழை மாணவியின் மருத்துவப் படிப்புச் செலவுக்காக எழுதப்பட்ட கடிதம் அது. மனத்தூய்மை ஒன்றே அக்கடிதம் எழுதத் தூண்டியிருக்க வேண்டும். 2003 ஜூன் 24 அன்று முருகதாஸை சந்தித்தார் ரமேஷ். அந்தச் சந்திப்பின் விளைவு கஸ்தூரியின் 5 ஆண்டுகால மருத்துவ படிப்புக்கான செலவை முருகதாஸ் ஏற்க முன் வந்தார்.

இந்தச் சந்திப்பு எப்படி சாத்தியமானது? அப்போது ரமேஷ் சென்னை திருவல்லிக்கேணியில் உள்ள வெங்கடேஸ்வரா ஹாஸ்டலில் தங்கி சிஏ படித்துக் கொண்டிருந்தார். அந்த ஹாஸ்டலில் உணவுக்கென்று மாதாந்திர கட்டணம் இல்லை. நாளைக்கு ஒருவேளை மட்டுமே சாப்பிட்டால் அதற்கு மட்டுமே கட்டணம் வசூலிக்கப்படும். பிரபலங்களின் முகவரிகள் என்ற நூலை வாங்கி பிரபலங்களை நாடி கஸ்தூரிக்கு உதவி பெறலாம் என்று யோசித்தார் ரமேஷ். புத்தகம் வாங்க கையில் பணமில்லை. வெங்கடேஸ்வரா ஹாஸ்டலின் உணவுக் கட்டண நடைமுறை ரமேஷுக்கு கைக்கொடுத்தது. நாளைக்கு இரு வேளை உணவைத் தவிர்த்து ஒரு வேளை உணவு மட்டும் உட்கொண்டு தனது செலவைக் குறைத்து பணம் சேமித்தார். சேமித்த பணத்தால் பிரபலங்களின் முகவரி கைக்கு கிட்டியது. பிரபலங்களிடம் உதவி கேட்டு கடிதம் எழுதத் தொடங்கினார். அப்படித்தான் இயக்குநர் முருகதாசுக்கும் ஒரு கடிதம் சென்றது. சத்தியத்தின் வாக்குக்கு யாரையும் அண்டியிருக்க வேண்டாம். இயக்குநரிடம் இருந்து ஒரு தந்தி வந்தது. தன்னை வந்து சந்திக்குமாறு கூறி தனது தொலைபேசி எண்ணையும் முகவரியையும் குறிப்பிட்டிருந்தார். அசோக் நகர் சாமியார் மடம் அலுவலகத்தில் ரமேஷ் இயக்குநர் முருகதாஸை கஸ்தூரியுடன் சந்தித்தார். ஒரு முகம் தெரியாதவன் எழுதிய கடிதம் கண்டு ஒரு முகம் தெரியாத ஏழைப் பெண்ணை மருத்துவராக்கினார் முருகதாஸ். அவரது சினிமாவில் கூட இப்படி ஒரு கதையை கற்பனை செய்திருப்பாரா முருகதாஸ்!

காக்காசு செலவில்லாமல் வெள்ளை கோட் அணிந்து மருத்துவக் கல்லூரி மாணவியாக வலம் வந்த கஸ்தூரியின் கதை ரமேஷின் ஊரான ஆரத்தி அக்கிரஹாரத்தில் எதிரொலிக்க ஆரம்பித்தது. ஊரக்காரர்கள் மத்தியில் ரமேஷ் ஒரு 'பெரிய மனுஷன்' ஆனார். தங்கள் பிள்ளைகளை படிக்க வைக்க வசதியற்றோர் ரமேஷ் வீட்டு வாசற்படியை மிதிக்கத் தொடங்கினார்கள். கஸ்தூரிக்கு கிடைத்த விடியலில் கிடைத்த உற்சாகத்தில் ரமேஷ் அளவுக்கு மீறிய நம்பிக்கை பெற்றார். 2003இல் தொடங்கி 2007

வரை ஏறக்குறைய 14 பேர்களை படிக்க வைத்தார் ரமேஷ். அவர்களில் சிலர் கலைக் கல்லூரிகளிலும் பொறியியல் கல்லூரிகளிலும் படித்து வந்தனர். குருநானக் கல்லூரியில் 5 பேர் சேர்ந்திருந்தனர். அப்போது ரமேஷ் வேளச்சேரி தண்டீசுவரம் பகுதியில்தான் வாடகைக்கு இடம் எடுத்து தங்கியிருந்தார். படித்துக் கொண்டிருந்தவர்களில் வெற்றி என்ற பையனும் ரமேஷும் அவ்வபோது பக்கத்து வீடுகளுக்கு சிலிண்டர் போடும் வேலை பார்த்து அதில் கிடைக்கும் சொற்ப தொகையில் எல்லோருக்கும் சமைத்து சாப்பிட வழி கண்டனர். ஆனால், அந்தத் தொகையை வைத்துக் கொண்டு பற்றாக்குறை பட்ஜெட்தான் போட முடிந்தது. வாடகையை நண்பர்களிடம் கடன் பெற்று சமாளிப்பதே போராட்டமாக இருக்கும்.

இந்த நிலையில்தான் சைதை துரைசாமியின் மனிதநேய அறக்கட்டளையின் பணிகள் குறித்தும் அவரது செயல்பாடுகள் குறித்தும் பத்திரிகை வாயிலாக அறிந்து கொண்ட ரமேஷ் அவரிடம் உதவி நாடி சென்றிருக்கிறார். ஆனால், அவரை எளிதில் அணுகிவிட முடியவில்லை. அங்கிருந்த உதவியாளர்களிடம் ரமேஷின் கதை எடுபடவில்லை. ஒரு சி.ஏ படிக்கும் மாணவன் பத்து பேரை படிக்க வைக்கிறானா? என்ற சந்தேகத்துடன் ரமேஷை பார்த்திருக்கிறார்கள். இறுதியில், தான் செய்து வரும் காரியம் பற்றி சைதை துரைசாமிக்கு விளக்கமாக ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். கடிதத்தில் அவருடன் தங்கியிருந்த வெற்றியின் செல்போன் நம்பரை குறிப்பிட்டிருக்கிறார். எப்படியோ இந்தக் கடிதம் சைதை கைக்கு போய்ச் சேர்ந்துவிட்டது. கடிதத்தைப் படித்த சைதை, ரமேஷ்கூட தங்கியிருந்த வெற்றியை செல்போனில் அழைத்து ரமேஷிடம் பேசியிருக்கிறார். ரமேஷின் முகவரியை கேட்டறிந்து கொண்டு உடனே தனது காரில் புறப்பட்டு வேளச்சேரி சென்று ரமேஷின் இடத்தையும் படிக்கும் பிள்ளைகளையும் கரிசனத்தோடு பார்த்திருக்கிறார்.

ரமேஷின் வாழ்க்கையில் இன்னும் ஒரு புதிய ஒளி! ஒரு புதிய பாதை!

சைதை துரைசாமி வேளச்சேரியில் தான் நடத்தி வந்த இலவச திருமண மண்டபத்தில் உள்ள அறைகளில் ரமேஷுடன் இருந்த மாணவர்களுக்கு தங்க இடமும் உணவும் தந்து உதவ முன் வந்தார். ரமேஷ் தனது பட்டாளத்துடன் அம்மா திருமண மண்டபத்தில் குடியேறினார். அங்கு நடக்கும் எல்லாத் திருமண நிகழ்வுகளின் போது இந்தப் பிள்ளைகளுக்கும் விருந்து சாப்பாடு உண்டு. அப்படி ஒரு ஏற்பாட்டை சைதை துரைசாமி வகுத்துக் கொடுத்திருந்தார். கல்யாண மண்டபத்தில் நிகழ்ச்சி பதிவு செய்யப்படும்போதே இந்த மாணவர்களுக்கும் சேர்த்து விருந்து ஏற்பாடு செய்யும்படி பதிவு செய்ய வருபவர்களிடம் அம்மா மண்டப நிர்வாகிகள் அறிவுறுத்திவிடுவார்கள். இப்படி கல்யாண சாப்பாடு சாப்பிட்டு வளர்ந்தார்கள் ரமேஷ் அணியினர்.

தினசரி சாப்பாட்டுக்கான மளிகை சாமான்களை ஒரு கடையில் தாராளமாகப் பெற்றுக்கொள்ளும்படி சைதை துரைசாமி கூறியிருந்தார். மாணவர்களுக்கு இடப்பிரச்சனையும்தீர்ந்தது.வயிற்றுப்பிரச்சனைக்கும் வழி பிறந்தது. மாணவர்களே சமைத்து சாப்பிட்டுக் கொள்வார்கள்.

அந்த மாணவர்களில் ஒருவர் இன்று டிபுடி கலெக்டர்; ஒருவர் ரெயில்வேயில் உயரதிகாரி. ஒருவர் ரெவன்யு இன்ஸ்பெக்டர்; ஒருவர் தாசில்தார். இப்படி அம்மா மண்டபத்தில் தங்கியிருந்த முப்பதுக்கும் மேற்பட்ட மாணவர்கள் அரசு வேலைக்கு சென்றுள்ளார்கள்.

இந்த மனநிறைவே இன்றுவரை முகவரியின் செயல்பாடுகளுக்கான ரமேஷின் எரிபொருளாக இருந்து வருகிறது.

சைதை துரைசாமிக்கும் அவரது எல்லா அறப்பணிகளிலும் ஆர்வமுடன் ஈடுபட்டு வந்த ரமேஷுக்கும்இடையே பெருகிய அன்பும் நெருக்கமும் உயர்வும் தாழ்வும் பாராமல் ரமேஷின் முகவரி அறக்கட்டளை வேரூன்ற வழிசெய்தன.

2002இல் ஆரம்பித்த தனது அறப்பணி குழுவுக்கு 2006இல்தான் முகவரி என்று பெயர் சூட்டினார் ரமேஷ். 2011இல் தான் முகவரி அறக்கட்டளையாகப் பதிவானது.

முகவரி முகிழ்ப்பதற்கு முன்பே சைதை துரைசாமியின் மனிதநேய அறக்கட்டளை ஊரறிய ஊர்போற்ற செயல்பட்டுக் கொண்டிருந்தது. அதன் மூலம் எத்தனையோ ஐ.ஏ.எஸ், ஐ.பி.எஸ் அதிகாரிகள் உருவாகி பணியாற்றத் தொடங்கிவிட்டார்கள். சைதை துரைசாமி மாநகர மேயர் பதவி வகித்தபோது அவரது அறக்கட்டளையில் பயின்ற மாணவர்களே அதிகாரிகளாக அவரிடம் பணிசெய்துள்ளனர். ஆனால், அவர்களை அதிகாரிகளாகவே மதித்துப் போற்றியவர் சைதை.

இந்தச் சூழ்நிலையிலும், இந்த உயரத்தில் இருந்தும் ஏழை மாணவர்களுக்காகப் பாடுபடும் ரமேஷ் தொடங்கிய அறக்கட்டளையையும் அரவணைத்து போற்றி வருகிறார் அரசியலில் செயல்படும் ஒரு மனிதர். இவை எல்லாம் சாத்தியமாகிறது இந்த 'தருமமிகு சென்னையில்' தான்.

தன்னை வளர்த்து ஆளாக்கிய மனிதநேய அறக்கட்டளையின் நிறுவனர் குறித்து ரமேஷிடம் கேட்டபோது அவர் சொன்னார்: "எங்கள் இருவருக்குமான பிணைப்பு விநோதமானது. அவர் இட்ட பணிகள் எதுவாயினும் காலம் நேரம் பாராமல் செய்து வந்திருக்கிறேன். அவர் மேயராக இருக்கும்போது சமூக ஆர்வலர்களை அழைத்து மாநகராட்சியின் ஒப்பந்தக்காரர்கள் ஒப்பந்த பணிகளை சரிவரச் செய்கிறார்களா என்பதை



ஆடிட்டர் மனோகரன்

சரிபார்க்க ஆய்வு மேற்கொள்ளும்படி கூறுவார். அத்தகைய குழுக்களிலும் நான் இடம்பெற்றிருக்கிறேன். அரசியலில் இப்படிப்பட்ட ஒரு அதிசய மனிதரைப் பார்க்க முடியாது. பதினைந்து ஆண்டுகளுக்கு மேல் அவரோடு பழக்கம் இருந்தாலும் இன்று வரை நான் நேருக்கு நேர் அதிகம் உரையாடுவதில்லை. என்னை அவர் அறிந்து கொண்டார். நான் நினைப்பதை அவர் புரிந்துகொள்வார். அவர் செல்வதை நான் செயலாற்றுவேன். நாங்கள் பேசாமலே பேசிக்கொள்வோம். அவர் மட்டும் அம்மா மண்டபத்தில் இடம் தந்து முகவரி மாணவர்களை பாராமரித்து வரவில்லை என்றால் இன்றைக்கு இந்த இடத்திற்கு முகவரி முன்னேறி வந்திருக்க முடியாது."

பிறகு 'முகவரி'யின் வளர்ச்சி குறித்து ரமேஷ் மனம் நெகிழ்ந்து பேசினார். "நான் சிஏ படித்துக் கொண்டிருந்தபோது 'வருமானவரி' பற்றி வகுப்பு எடுக்க மனோகரன் என்று ஒரு ஆடிட்டர் வருவார். அவர் இந்தியாவில் உள்ள பத்து பெரும் ஆடிட்டர்களில் ஒருவர். அவரது தந்தை ஒரு சுதந்திர போராட்ட தியாகி. ஆடிட்டர்களில் பத்மஸ்ரீ பட்டம் பெற்றவர். நான் அவரது மாணவன். ஆனால், எனது செயல்பாடுகள் பற்றி கேள்விப்பட்டு 'முகவரி' மீது ஆர்வம்காட்டத் தொடங்கினார். முகவரியை அவருக்குத் தெரிந்த எல்லா ஆடிட்டர்களுக்கும் அறிமுகம் செய்து நிதி திரட்டி இன்றைக்கு சுமார் 40 பிள்ளைகளைப் படிக்க வைத்து வருகிறார். ஏ.ஆர். முருகதாஸ், சைதை துரைசாமி, ஆடிட்டர் டிஎன் மனோகரன் ஆகிய மூவரும் இன்றைக்கு முகவரியின் மூன்று தூண்கள். பிறகு இன்னும் பல பெரிய மனிதர்களின் தாயுள்ளத்தால் முகவரி தளர்ச்சியின்றி இயங்கி வருகிறது. அப்படி இணைந்தவர்களில் ஒருவரான ராசி சீட்ஸ் அக்ரி கம்பெனியின் சேர்மன் டாக்டர் ராமசாமி அவர்கள் 43 மாணவர்களின் கல்விச் செலவுக்கான புரவலர். அவரும் எங்கள் ஊரான ஆத்தூரைச் சேர்ந்தவர். அவரது மகள் சித்ரா செந்தில்நாதன் 16 பேரை படிக்க வைத்து வருகிறார். மேலும் சேலத்தைச் சேர்ந்த பாலாஜி ரப்பர் நிறுவனத்தின் சேர்மன் வைத்தியலிங்கம் 25 மாணவர்களை படிக்கவைத்து வருகிறார். ஸ்ரீராம் கேபிடல் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் அகிலா சீனிவாசன் ஒரே நேரத்தில் எனக்கு 20 லட்சம் ரூபாய்க்கு காசோலை வழங்கினார். அவர் 30 மருத்துவ மாணவர்களின் முழு கல்விச் செலவை ஏற்றுள்ளார். முன்னாள் இந்தியத் தலைமை தேர்தல் அதிகாரி டிஎஸ் கிருஷ்ணமூர்த்தி IRS, முன்னாள் தமிழ்நாடு காவல்துறைத் தலைவர் டிகே ராஜேந்திரன் IPS, சென்னை வருமான வரித்துறை ஆணையர் வி. நந்தகுமார் IRS, தமிழ்நாடு போக்குவரத்துத் துறை ஆணையர் ஏ. சண்முகசுந்தரம் IAS, முன்னாள் சுங்கத்துறை முதன்மை ஆணையர் சி. இராஜேந்திரன் IRS, தமிழ்நாடு காவல்துறை கண்காணிப்பாளர் டாக்டர் ஆர். சிவக்குமார் IPS உள்ளிட்ட பலர் முகவரியைத் தாங்கிப் பிடிக்கிறார்கள்.

கடந்த ஐந்து வருடங்களாக என்னைவிட முகவரியின் செயல்பாட்டுக்காக அல்லும் பகலும் சிந்திருக்கிறவர் ஒருவர் உண்டு என்றால் அவர்தான் சுமதி. நோக்கியா நிறுவனத்தின் ஒரு பிரிவுக்குத் தலைவராக உள்ளார் சுமதி. இன்று முகவரியின் நிர்வாகம் முழுமையையும் அற்புதமாக சீரமைத்து இயக்கி வரும் சுமதியின் சொந்த ஊர் வள்ளலார் வாழ்ந்த மேட்டுக்குப்பம். தற்போது முகவரிக்கு இடம்பெயர்ந்திருக்கிறார் இந்தப் பெண் வள்ளலார். முகவரிக்கு மட்டுமல்லாமல் ரமேஷுக்கும் உடன்பிறவா சகோதரியாக இருந்து அவரை பாதுகாத்து வருகிறார்.

மேலும் முகவரியில் படித்து வேலைக்குப் போய்விட்ட மாணவர்களில் மூன்று பேர் முகவரியின் அறங்காவலர்களாக இருக்கிறார்கள். அந்த மூவரில் ஒருவர் டில்லி AIIMS மருத்துவக் கல்லூரியில் M.D படித்து வரும் சந்தியா. அமெஸானில் பணியாற்றும் சரவணன் ஒருவர். கோவை மாவட்ட விவசாய அதிகாரியான வெற்றிவேல் ஒருவர். நான் முதன்முதலாக சைதை துரைசாமியைப் பார்க்கப் போகும்போது என்னுடன் வந்தவர்தான் வெற்றிவேல். முகவரிக்கு மொத்தம் ஏழு டிரஸ்டிகள். அவர்களில் மூவர் முகவரியின் முன்னாள் மாணவர்கள். இன்றைக்கு தமிழ்நாட்டில் உள்ள அரசு மருத்துவக் கல்லூரிகளில் 250 முகவரி மாணவர்கள் மருத்துவம் பயில்கிறார்கள். சென்னை அண்ணா பல்கலைக் கழகத்தில் மட்டும் 104 பேர் முகவரி மாணவர்களாகப் படித்து வருகிறார்கள். கோவை வேளாண் பல்கலைக்கழகத்தில் 62 பேர் படிக்கிறார்கள்."

